# மூவர் அடங்கன் முறை

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் மூவரும் பாடிய தேவாரங்கள் முழுமையும் அடங்கிய பெரிய புத்தகம். காலிகோ பைண்டு செய்தது விலை ரூபா 5.

இவ்வருமையான புத்தகம் ஒவ்வொரு சைவர் வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டிய தொன்று. இவ் வடங்கன்முறையினது அருமையும் அளவிடுதற்கரியது. இதனை ஒவ்வொருவரும் அனருடம் விதிப்படி சிரத்தையோடு பாராயணம் பண்ணி வருவாராயின் இஷ்டகாமியார்த்தங்களை எளிதில் அடையக்கூடு மென்பது பெரியோர் துணிபு.

பிறவிப் பெருங்கடல் நீந்துதற்கு ஓர் அரும்பெரும் தெப்பமாயும் சைவ சமயத்துக்கோர் திலகமாய் விளங்கும் இத்துணை அரிய பெரிய நூலை அச்சிடாது வாளாவிருத்தல் சைவ சமயத்தினருக்கே மிகவும் இழிவைத் தருமென்று கருதி அதிகச் செலவிட்டு ராயல் 8 பேஜ் சைசில் புதிய எழுத்துக்களில் சரித்திரக் குறிப்பு, ஸ்தலக் குறிப்பு, இராகம் முதலியன பிரித்து உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அழகாக அச்சிட்டிருக்கிறோம்.

# மதனபூஷணம் அல்லது இறந்தவள் பிழைத்தது

## ஒரு துப்பறியும் நாவல்.

ஸ்திரீகளுக்கு அளவுமீறிய சுயாதீனம் அளிப்பதால் உண்டாகும் தீமைகள் இதில் நன்ருய் விளக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் பல நீதிகளும் இதில் விளங்கும். குற்றவாளி எவ்வளவோ தந்திரமாயும், முன் யோசனையோடும் குற்றத்தைச் செய்திருக்க, துப்பறிபவர் அதைக் கண்டுபிடிப்பது வாசிப்பவர்களுக்கு அதிக ஆச்சரியத்தையும், பிரமையையும் உண்டாக்கும். நிரபராதியான ஒருவன், சந்தர்ப்ப சாக்ஷியங்களாலும் மெய்யான குற்றவாளி செய்த தந்திரத்தாலும் ஆபத்தில் சிக்கிக்கொண்டு மரண தண்டனையடையும்தறுவாயிலிருப்பது வாசிப்பவர்களுக்கு மிக சோகத்தை யுண்டாக்கும். விலை ரூபா 1.

# ஸ்திரீ புருஷ ஜாதகத் திறவுகோல்

ஜோதிடரை விரும்பாமலே ஒவ்வொருவரும் தாம் தாமே ஜாதக கணிதம் பண்ணவும், 9 கிரகங்களை 12 இராசிகளில் அடைத்து ஆட்சி யுச்சம் நிலைகளைக்கண்டு பலாபலன் சொல்லவும், இராசியில் 7 கிரகங்கள் ஒன்ருகக் கூடி யிருப்பினும், இரண்டு மூன்று கிரகங்கள் சேர்ந்திருப்பினும் வேறு விதமாக மாறி மாறியிருப்பினும் அவைகட்கு அனுபவமாகப் பலன் தெரிந்து சொல்லவும் இதனால் தெரிந்து கொள்ளலாம். இதன் விலை அணு 8.

நிமித்தியகுறி சாஸ்திரம் இதன் விலை அணு 2.

---

ஞானபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

வாலைடிகளிலுள்ள இன்பரச நூல்களின் கொள்கைகளும், இன்ப வாழ்க்கையின் இரகசிய முறைகளும், அவற்றிற்குப் பொருத்தமான மனத்தையும் கண்ணையும் கவரும் ஆப்டோன் படங்களும், லயன் பிளாக்குகளும், இன்னும் இல்வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகிய அநேகம் விஷயங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதனை வாங்கிப்படிப்போர் உண்மைக் காதல் என்பது இன்னதென்பதையும், இன்னவிதமானவர்களை மணம் புரிந்தால் தான் இன்பம் ஏற்படுமென்பதையும், இல்வாழ்க்கையில் இன்னவித மணக்கிரமங்களை அனுசரித்தால்தான் அளவற்ற ஆனந்தமுற்று அழகிய சந்ததிகளைப் பெற்று ஜீவித்திருக்கலாமென்பதையும் உணர்ந்து இவ்வுலகத்தில் அடைய வேண்டிய இன்பத்தையும், வறுமை இன்பத்தையும் அடைவார்கள். இதனை ஒவ்வொரு குடும்பத்தினரும் வாங்கி வாசிக்கலாம்.

ஷை தெலுங்கு பதிப்பு விலை ரூபா 2.

# திருவிளையாடற் புராண வசனம்

**64 திருவிளையாடல்களுக்கும் ஐதீகப் படங்கள் உள்ளன.**

**காலிகோ பைண்டு செய்தது விலை ரூ. 2.**

சிவபெருமான், சோமசுந்தரக் கடவுளாக மதுரையம்பதியில் எழுந்தருளி அடியார்கள் உய்யும்பொருட்டு நடத்திக் காட்டிய அற்புதத் திருவிளையாடல்கள் அறுபத்துநான்கும் இதில் அடங்கியிருக்கின்றன. இந்நூல் சிவபெருமானுடைய மகிமைகளைத் தெள்ளிதில் உணர்த்தும். இன்னும் சிவபெருமான் அடியார்க்கெளியன் என்பதையும், அவர் தம்மை நம்பின பக்தர்களை ஆட்கொள்ளுதற்கு எத்தகைய தொழிலையும் புரிந்து அவர்களுக்கு உதவிசெய்வான் என்பதையும், சிவனடியார் சிறப்புகளையும், எல்லோருக்கும் விளக்கமாகத் தெரிவிக்கும்.

# ஞானசெல்வாம்பாள் அல்லது

## இரண்டு சகோதரிகள் (5-பாகங்கள்)

ஞானம்பாள் செல்வாம்பாள் என்ற இரண்டு சகோதரிகளே இந்நாவலில் கதாநாயகிகள். இந்த கன்னிகைகள் மேலதிகாரமின்றித் தங்கள் பிரியப்படி நடக்குமாறு விடப்பட்டனர். அன்னிய வாலிபரிடம் தாராளமாய்ப் பழக்கப்பட விடப்படுவதே நல்ல நாகரீகமென்று கருதுவது முதலிய ஆசாரங்களால் விளையும் தீங்குகள் அனுபவமாய் விளக்கப்பட்டிருக்கின்றன. அதோடு பெரும்பாலான கன்னிகைகள் உலக அனுபவமில்லாத அந்தப் பருவத்தில் தங்களுக்குத் தகுதியான கணவர்களைத் தாங்களே தேர்ந்தறிந்துகொள்ளச் சக்தியற்றவர்களென்பதும், அயோக்கியர்களது வஞ்சக வலையில் அவர்கள் எளிதில் சிக்கிக்கொண்டு தங்கள் வாழ்நாள் முழுவதையும் பெருந்துன்பத்தை யனுபவிக்க நேருமென்பதும் இக்கதையால் நன்கு விளங்கும்.

இக்கதாநாயகிகளின் நடக்கைகளால் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் குணங்களைக் கைவிடாமல் நன்னெறியைக் கடைப்பிடித் தொழுகும் கன்னிகை முடிவில் நல்ல பலன்களையும், மேலான பதவியையும் அடைவாளென்பதும், அற்ப போகங்களிலும் படாடோப வாழ்க்கைகளிலும் இச்சை வைப்பவள் துன்பத்தையே யடைவாளென்பதும் தெளிவாய் நிரூபிக்கப்படுகிறது

இக்கதையில் சம்பந்தப்பட்ட முக்கியமான ஆடவனாகிய தேவராஜன் என்பவனுடைய சரித்திரத்திலும், கிருஷ்ணராஜன் மச்சநாதன் என்பவர்கள் சரித்திரத்திலும் மிக்க ஆச்சரியமும் மனதை யடியோடு கவர்ந்து கொள்ளத்தக்க அபூர்வ சம்பவங்களும் நிறைந்திருப்பதோடு பல அரிய நீதிகளும் நன்னெறிகளும் அனேகம் பொதிந்து கிடக்கின்றன என்பது வாசிப்போர்க்கு நன்கு புலப்படும். **5-பாகங்கள் விலை 9—10—0.**

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.**

ஆசிரியரின்றி ஆங்கிலந் தெரிந்துகொள்ளும் **ஆனந்த**

# ஆங்கில பாஷா போதினி.

**(நான்காம் பதிப்பு)** **விலை ரூபா 2.**

**ஆனந்தபோதினி சந்தாதாரர்களுக்கு விலை ரூ. 1—8—0.**

எம். ஏ., எல். டி. பட்டம் பெற்ற ஆங்கில போதகாசிரியராகிய திருவாளர் எம். ஷண்முகசுந்தர முதலியாரவர்களால் இயற்றப்பெற்ற உயர்ந்த திருத்தங்களோடும், சிறந்த அமைப்புகளோடும், நிறைந்த போதனைகளோடும் இப்பதிப்பு வெளிவந்திருக்கிறது.

**800-பக்கங்களுக்குமேல் திக்கு காகிதத்தில் அச்சிடப்பட்டு சீமை காலிகோ பைண்டு செய்யப்பட்டது**

பற்பல கதைகளும், பாரதக் கதைகளும், ஸ்ரீ கிருஷ்ணர் சரித்திர சுருக்கமும் அடங்கியது. அவற்றிற்குப் பொருத்தமான அழகிற் சிறந்த 16-ஆப்டோன் படங்களுடன் கூடியது.

இக்காலத்தில் இங்கிலீஷ் இராஜ பாஷையாயிருப்பதால் அதை எல்லோரும் கற்றுக்கொள்ள வேண்டியது அவசியமா யிருக்கின்றது! அம்படிப் படிக்காத சிலர், பல சங்கடங்களை அடைகின்றனர். ஆதலின், அத்தலகையினர் கற்றுக் கொள்வதற்குதவியா யிருக்கும்படி ஆங்கில பாஷையைத் தமிழ் மக்களுககு எளிதில் போதிக்கும் அரிய போதனு முறை நூலாகிய இது பலர் வேண்டுகோளுக்கிணங்க வெளியிடப் பெற்றிருக்கிறது.




இதனைச் சிரத்தையுடன் படிப்பவர் பணச் செலவில்லாமலும், வேறெவ்விதக் கஷ்டமில்லாமலும் மிக எளிதில் இங்கிலீஷ் பேசவும் படிக்கவும் எழுதவும் கற்றுக் கொள்ளலாம். ஆயிரக்கணக்கான பணச் செலவு செய்து 10 வருஷம் படிப்பதனால் எவ்வளவு ஆங்கில தேர்ச்சி யுண்டாகுமோ அவ்வளவு தேர்ச்சியை ஒரு மாதம் அல்லது 40-நாளில் இப் புத்தகத்தின் உதவியைக் கொண்டு அடைந்து, ஆங்கிலத்தை அதி விரைவில் படித்துக் கொள்ளலாம் இதில் சுலபமாக இங்கிலீஷ் கற்றுக்கொள்ளத்தக்க மார்க்கங்கள் விளக்கப்பெற்றிருக்கின்றன.

இதில் இதுவரை வெளிவராத நூதன பாட முறைகளெல்லாம் வெளியிடப்பட்டிருக்கின்றன. இன்னும் ஒரு ரூபா முதல் 10 ஆயிரம் ரூபாவரை சம்பளப்பட்டிக் கணக்கு, வட்டிக் கணக்கு, ஒவ்வொரு தேசத்திலும் ஏற்படும் மணி வித்தியாசம், அன்னிய தேச நாணய மதிப்பு முதலியன வெல்லாம் தெளிவாக விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது.

மேற்படி தெலுங்கு பதிப்பு விலை ரூபா 2.

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

# இரத்தினபுரி இரகசியம்

## ஓர் மகா அற்புதமான புதிய நாவல் (9-பாகங்கள்)

இது நாவல் எழுதுவதில் ஒப்புயர்வற்றவரென்று உலகப் பிரசித்தி பெற்ற G. W. M. ரெய்னல்ட்ஸ் என்பவரால் வரையப்பெற்ற அதியற்புதமான நாவல்களில் முதன்மைபெற்ற நாவலின் மொழிபெயர்ப்பு. இது காறும் ஒருவராலும் தமிழில் எழுதப்படாதது. தற்காலத்தில் தமிழ் நாவல்கள் எழுதுவதில் பிரக்யாதிபெற்றவரும் தமிழில் அநேக நாவல்கள் மொழிபெயர்த் தெழுதியவருமாகிய ஸ்ரீமான் ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியது.

இந்த நாவலில்தான் கிரந்தகர்த்தா தமது இணையற்ற சாமர்த்திய முழுவதும் வெளியிட்டிருக்கிறார் என்பது ஆங்கிலத்தில் அவர் நாவல்களை வாசித்த யாவரும் அறிந்ததோருண்மையாகும். இதில், வேறு எக் கதைகளிலும் நாம் கேட்டிராத அற்புதங்களும் நெஞ்சு திடுக்கிட்டுத் திகைக்கக் கூடிய சூட்சிகளும் நிறைந்திருப்பதோடு, ஆடவர்களின் பலபேதமான நடவடிக்கைகளும், அவற்றாலடையும் பலன்களும், ஸ்திரீகளின் குணபேதங்களும், கற்புடைய ஸ்திரீகள் தங்கள் கற்பைக் காக்கும் விஷயத்தில் உபயோகிக்கும் துணிகரமான வீரதீர சாமர்த்தியச் செயல்களும் தெளிவாய் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் தற்கால நாகரிகத்தை யொட்டி நமது நாட்டாருக்கு இன்னின்ன ஆசாரங்கள் நன்மைபயக்குமென்றும், இன்னின்ன ஆசாரங்கள் தீமை பயக்குமென்றும், நமது மாதர் கடைப்பிடிக்க வேண்டிய ஆசார வொழுக்கங்கள் இன்னின்னவை யென்றும் அந்தந்தச் சமயங்களில் மனதிற் றரிக்கும் வண்ணம் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இது ஆதிமுதல் அந்தம்வரையில் மனதை முழுதும் கவரக்கூடியதென்பது கூறாமலே விளங்கும்.

| | | | |
|---|---|---|---|
| முதல் இரண்டு பாகங்கள் | விலை | ரூபா | 4—0—0 |
| 3-முதல் 6-வரை 4 பாகங்கள் | ,, | ,, | 7-10—0 |
| 7-ம் பாகம் | ,, | ,, | 2—4—0 |
| 8-ம் பாகம் | ,, | ,, | 2—4—0 |
| 9-ம் பாகம் | ,, | ,, | 2—0—0 |

## 2 ரூபாய் விலையுள்ள புத்தகம் இனாம்!

# பெரிய புராணம்

உயர்திரு. கா. ஆலாலசுந்தரம் பிள்ளை அவர்கள் சித்தாந்த போதாந் திருகாரமென்னும் பேருரையும், திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் முதலிய சித்தாந்த சாத்திரங்களும், சேர்ந்தது. கீழே குறித்தபடி இதுவரையில் வெளியிட்டிருக்கும் பாகம் முன் விலை ரூ. 11—8—0 குறைந்த விலை ரூ. 6—8—0 தபாற் செலவு வேறு. இதோடு 2 ரூபாய் விலையுள்ள புத்தகம் இனாம்!

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

# மதிமோசக விளக்கம்.

(தூசி இராஜகோபால பூபதி அவர்கள் இயற்றியது)

## ஆன்றோர் மதிக்கும் நான்காம் பதிப்பு.

223-பக்கங்கள் கொண்டது. 16-விநோதமான சித்திரப்படங்கள் சேர்க்கப்பட்டது. உயர்ந்த திக்கு கடிதத்தில் அச்சிடப்பட்டது.

## இதன் விலை ரூபா 1—0—0.

சொற்ப பிரதிகளே கைவசமிருக்கின்றன.
உடனே ஆர்டர் செய்யுங்கள்.

தருமமே தழைத்தோங்கி வளர்ந்துவந்த மகா புண்ணிய பூமியாகிய நம் பரதகண்டத்தில், கலிகாலந் தொடங்கியதிலிருந்து, மனிதர், காலவயப்பட்டு, மனம் மாறுபட்டுத் தருமத்தில் செலுத்தும் சிந்தையை மிகுதியும் அதர்மத்தில் செலுத்தி வருவதால் அறநெறி குறைந்து மறநெறி வளர்ந்து வருகின்றது. அதற்கேற்ப வஞ்சமும், சூதும், பஞ்சமாபாதகமும் அவற்றிற்கஞ்சா நெஞ்சமும் படைத்த மனிதரே நாள்தோறும், நாடுகள்தோறும், ஊர்தோறும், வீடுகள்தோறும் மலிந்து, விநோதம் விநோதமான படுமோசம், மதிமோசம், நிதிமோசங்களையும், சூது வஞ்சனைகளையும் செய்து வருகின்றனர். காலம் செல்லச் செல்ல இதற்குமுன் கண்டும், கேட்டுமிராத எண்ணிறந்த மோசநாசச் செயல்கள் எங்கும், என்றும் நூதனம் நூதனமாகத் தோன்றி அதியற்புதத்துடன் வளர்ந்துகொண்டே வருகின்றன; அவற்றைச் செய்யும் மனிதர்களும் உற்பாத பிண்டங்களாய் ஒருவரை யொருவர் எடுத்து விழுங்குவோராய் அற்புதமாக உற்பவித்து மலையை விழுங்கிய மகாதேவன் போல வளர்ந்து சிறந்து ஜெகஜாலப்புரட்டராயும், அண்டப்புரட்டராயும், நிடைப் புளுகராயும் பரவி வருகின்றனர். இவர்களுடைய மகாமோசச் செயல்களால் சூதுவாதறியாத உலகத்தார் அடையும் கஷ்ட நஷ்டங்களுக்களவேயில்லை. வியாபாரத்தொழில் முழுவதிலும் மோசம்; விவசாயத்திலும் மோசம்; உத்தியோகத் துறைகளினும் ஒப்பில்லா மோசம்; வித்தையிலும் மோசம்; வேடிக்கையிலும் மோசம்; வைத்தியத்திலும் மோசம்; மாந்திரீகத்திலும் மோசம்; சோதிடத்திலும் மோசம்; சோற்றுக்கடையிலும் மோசம்; கப்பலிலும் மோசம்; ரெயிலிலும் மோசம்; நீதிச்சபைகளிலும் மோசம்; தேசச் சேவைகளிலும் மோசம்; கோவிலிலும் மோசம்; குளத்திலும், வீட்டிலும் மோசம்; காட்டிலும் மோசம்; நாட்டிலும் மோசம்; நகரத்திலும் மோசம் இப்படியே மனிதர் தலை நீட்டு மிடங்களெல்லாம் மோசமயமாகவே யிருக்கின்றனா. உலகமுழுவதும் இவ்வாறே மோசம் நிறைந்ததா யிருப்பதனாலே வஞ்சகமற்ற மனிதர் துன்பத்திற்குள்ளாகிச் சதா சர்வகாலமும் சஞ்சலப்படுகின்றனர்; இத்தகைய மோசநாச வலையினின்றும் தப்புதற்கு மார்க்கங் காணாதவர்களாய்த் தவிக்கின்றனர். ஆதலின், இந்தப் படுமோசப் பெரும் பாதாளத்தில் மனிதர் வீழ்ந்து மயங்காமல் தப்பித்துய்தற் கேதுவாயிருக்கும்படி, உலகத்தில் உலாவும் எண்ணிறந்த மோசச் செயல்களெல்லாம், இப்புத்தகத்தில் மிக்க விளக்கமாக எழுதப் பெற்றிருக்கின்றன.

---

**ஆனந்தபோதினி ஆபீஸ்,**

**தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.**

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



தொகுதி 27 | விஷு ஹு தைமீ ௧உ | 1942 ஹு ஜனவரிமீ 14உ | பகுதி 7

## கடவுள் வணக்கம்.

எல்லா உலகமு மானாய் நீயே
    ஏகம்ப மேவி இருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே
    ஞானச்சுடர் விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைகள் அறுப்பாய் நீயே
    புகழ்ச்சேவடி என்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வந் தருவாய் நீயே
    திருவையாறு அகலாத செம்பொற் சோதீ. (1)

---

ஆவினில் ஐந்தும் அமர்ந்தாய் நீயே
    அளவில் பெருமை யுடையாய் நீயே
பூவினில் நாற்றமாய் நின்றாய் நீயே
    போர்க்கோலங் கொண்டெயில் எய்தாய் நீயே
நாவில் நடுஉரையாய் நின்றாய் நீயே
    நண்ணி அடிஎன்மேல் வைத்தாய் நீயே
தேவர் அறியாத தேவன் நீயே
    திருவையாறு அகலாத செம்பொற் சோதீ. (2)

---

எண்டிசைக்கும் ஒண்சுடராய் நின்றாய் நீயே
    ஏகம்ப மேய இறைவன் நீயே
வண்டுஇசைக்கு(ம்) நறுங்கொன்றைத் தாராய் நீயே
    வாரா உலகுஅருள வல்லாய் நீயே
தொண்டுஇசைத்துஉன் அடிபரவ நின்றாய் நீயே
    தூமலர்ச்சேவடி என்மேல் வைத்தாய் நீயே
திண்சிலைக்குஓர் சரங்கூட்ட வல்லாய் நீயே
    திருவையாறு அகலாத செம்பொற் சோதீ. (3)

# அருட்பொருள் விளக்கம்

(இ-ள்) திருவையாறு என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள செம்பொற் சோதி சொரூபனுன தியாகராஜப் பெருமானே! சர்வ லோகங்களுக்குந் தாரகமாய் இருப்பவன் நீயே; திருவேகம்பம் என்னுந் திருப்பதியில் மூர்த்தங் கொண்டிருப்பவன் நீயே; நல்லாருடைய நன்மையை அறிபவன் நீயே; ஞானச்சுடர் விளக்காய் நிற்பவன் நீயே; கொடுமை வாய்ந்த கன்மத்தை வேரறுப்பவன் நீயே; புகழ்வாய்ந்த சிவந்த திருவடிகளை என் சிரத்தின்மீது வைப்பவன் நீயே; ஓரிடத்தில் நில்லாது செல்வதாகிய செல்வத்தை வழங்குபவனும் நீயே. (எ-று)

'அங்கு இங்கு எனுதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்த'வனே ஆண்டவனுதலால், "எல்லா உலகமுமானுய் நீயே" என்றூர். (1)

(இ-ள்.) திருவையாறு என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள செம்பொற் சோதி சொரூபனுன தியாகராஜப் பெருமானே! காமதேனுவாகிய பசுவினிடத்து ஐந்துவிதப் புனிதப் பொருளாய் விளங்கியிருப்பவன் நீயே; அளவில்லாத பெருமை வாய்ந்த பெம்மான் நீயே; போர்க்கோலங் கொண்டு முப்புரத்தின் மீது படையெடுத்த சிவபெருமான் நீயே; நாவினிடை நிலவும் மொழியாய் நிற்கும் நிமலன் நீயே; அடியேனிடம் வலிய வந்தணுகி என் சிரத்தின் மீது திருவடிகளைச் சூட்டித் திருவருள் புரிந்த தெய்வம் நீயே; தேவர் முதல் விண்ணேர் அனைவரும் கண்டறியாத தேவதேவன் நீயே. (எ-று.)

இறைவன் எங்கும் எப்பொருளினுலும் நிலவி ஜீவராசிகளை ஆட்கொண்டருளுந் தன்மையை வெகு அழகாக இப் பாடலில் கூறியிருக்கிறூர். (2)

(இ-ள்.) திருவையாறு என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள செம்பொற் சோதி சொரூபனுன தியாகராஜப் பெருமானே! எட்டு திக்குகளுக்கும் ஒப்பற்ற ஒளிச் சுடராய் நிற்கும் செம்பொற் சோதி நீயே; திருவேகம்பம் என்னும் திருப்பதியில் வீற்றிருந்த இறைவன் நீயே; வண்டுகள் சுற்றிச் சுற்றி வந்து ரீங்காரஞ் செய்யும் வாசனை பொருந்திய கொன்றைப் பூமாலை சூடிய சிவபெருமான் நீயே; மீண்டும் பிறப்பெடுத்து இவ் வுலகில் வாராத பேற்றை அருளவல்ல எம்மான் நீயே; உன் திருவடிகளைப் போற்றித் தொண்டு புரியும்படி திகழ்ந்து நிற்கும் தேவன் நீயே; தூய நறுமலர்கள் நிரம்பிய சேவடிகளை என் சிரத்தின்மீது சூட்டியிருக்கும் தெய்வம் நீயே; திண்மை வாய்ந்த வில்லுக்கு ஒரு அம்பைப் பொருத்தி எய்யவல்ல வல்லாளன் நீயே. (எ-று.)

'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி' என்னுந் திருக்குறள் கருத்து, 'வாரா உலகு அருளவல்லாய் நீயே' என்ற அடியில் மிளிர்வது குறிப்பிடத்தக்கது. (3)




# தமிழ் இசை வளர்ச்சியைத் தடுக்க சதி

"தை பிறந்தால் வழி பிறக்கும்" என்பது நந்தமிழ் நாட்டுப் பழமொழி. இவ்வனுபவமொழி மற்ற விஷயங்களில் எவ்வளவுதூரம் உண்மையா யிருந்தாலும், தமிழ் இசை சம்பந்தப்பட்ட மட்டில் உண்மையாயில்லை. இன்று தை பிறந்துவிட்டது. ஆனால், தமிழ் இசைக்கு—அதன் ஆக்கத்துக்கு மட்டும் இன்னும் எவ்வித வழியும் பிறக்கவில்லை. சென்ற நாலைந்து மாதங்களுக்கு முன், தமிழ்இசை வளர்ச்சிக்கென சிதம்பரம் அண்ணாமலை சர்வகலாசாலையில் ஒரு தமிழ் இசை மகாநாடு நடைபெற்றது வாசகநேயர்களுக்கு ஞாபக மிருக்கும். அம்மகாநாட்டில் கலந்துகொண்ட சங்கீத வித்வான்களுள், தமிழ் இசை சம்பந்தமாகச் சிலர் கொண்ட விபரீத மனோபாவம், 'தமிழில் இசை யுண்டா? இல்லையா?' என்று ஆராய்ச்சி செய்ய வேண்டிய அளவுக்குக் கொண்டுவந்து விட்டது. சிதம்பரம் சங்கீத மகாநாட்டை முன்னிட்டே, நாம் இரண்டு மாதங்கள் தொடர்ந்து தலையங்கங்கள் எழுதி யிருந்ததை வாசகநேயர்கள் இதற்குள் மறந்திருக்க மாட்டார்கள். 'தமிழ்நாட்டில் சங்கீத கச்சேரிகளில் தெலுங்கு முதலிய அந்நிய மொழிப் பாடல்கள்தான் ஆதிக்கம் பெற்றிருக்கின்றனவே யொழிய, தமிழ்ப்பாடல்களுக்குத் தகுந்த ஸ்தானம் இல்லவே இல்லை. ஆதலால், இனியேனும் தமிழ்ப்பாடல்களுக்கு முதன்மை ஸ்தானம் அளிக்கப்படவேண்டும். சங்கீத வித்வான்கள் சங்கீதக் கச்சேரிகளில் தமிழ்ப்பாடல்களையே பெரும்பாலும் பாடுதல் வேண்டும்' என்று தமிழ்மக்கள் மனதில் பல்லாண்டுகளாக இருந்துவந்த குறையை-அவர்களின் நீண்டகால அபிப்பிராயத்தை-சிதம்பரம் சங்கீத மகாநாடு ஒரு தீர்மானம் வாயிலாக, சங்கீத வித்வான்களுக்கு வெளிப்படுத்தி வேண்டுகோள் விடுத்தது. உடனே எழுந்துவிட்டது ஒருபெருங் கூக்குரல், 'கர்நாடக சங்கீதத்துக்கு ஆபத்து

வந்து விட்டது' என்று. 'சங்கீதத்துக்கு ராகம் பிரதானமே யொழிய, பாஷை பிரதானமில்லை' என்றும், 'சங்கீதத்துக்குப் பொருத்தமாகத் தமிழ்மொழியில் பாட்டுக்கள் இல்லையே' என்றும், 'சங்கீதக் கச்சேரிகளில் பாட்டு பாடும் விஷயத்தில் சங்கீத வித்வான்களைக் கட்டுப்படுத்தக் கூடாது' என்றும் எல்லாம் ஒரு சிறு கூட்டத்தினர் ஆட்சேபஞ் செய்யத் தொடங்கி விட்டனர். அன்று கிளம்பிய கிளர்ச்சி இன்னும் அடங்கிய பாடில்லை. சிதம்பரம் சங்கீதமகாநாட்டின் எதிரொலி இன்னும் அதிகமாக முழங்கிக்கொண்டு இருக்கிறது.

* * * *

தமிழ் இசை ஆக்கமுற வேண்டும்; தமிழ்நாட்டில் தமிழ் இசைக்கு நியாயமாக இருக்கவேண்டிய ஸ்தானத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற ஆர்வத்தோடு வேலை செய்யும் அறிஞர்கள், தேவகோட்டையிலும் திருச்சியிலும் முறையே தமிழ் இசை மகாநாடுகள் கூட்டி, தங்கள் நோக்கத்தை மிகத் தெளிவாக எடுத்துக் காட்டினார்கள். ஆனால், தமிழ் இசை இயக்கத்துக்கு வைரிகளாக உள்ள ஒரு சிறு கூட்டத்தார் தங்கள் விஷமப் பிரசாரத்தை நிறுத்தாமல் தொடர்ந்து செய்து வருகிறார்கள். தமிழ் இசை வளர்ச்சி முயற்சியை எவ்விதத்திலும் உருப்படாமல் செய்து விடப் பெரிய சதிசெய்து வருகிறார்கள்.

தமிழ் இசை வளர்ச்சி சம்பந்தமான இவ் விவாதம் பற்றி, சென்னை சங்கீத வித்வத் சபை பரிசீலனை செய்து ஒரு நன் முடிவு செய்யுமென்று எதிர்பார்த்தோம். ஆனால், அதுவுந் தன் கடமையினின்றுந் தவறிவிட்டது. நடுநிலையாக இருந்து பிரச்னையை ஆராயவேண்டிய அச் சங்கீத வித்வத் சபை ஒரு சார்பில் நின்று பாரபட்சமாக நடந்து கொண்டது. நம் தமிழ் இசை வளர்ச்சி முயற்சியை எதிர்க்கும் ஒரு சிறு கூட்டத்தாரே சங்கீத வித்வத் சபையிலும் ஆதிக்கம் பெற்றிருப்பதால், அதாவது அவர்களே முக்கிய நிர்வாகிகளாயிருப்பதால் அச் சபை சார்பில் நடந்த மகாநாட்டில் தமிழ் இசை வளர்ச்சி முயற்சிக்குப் பாதகமாகத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டதில் ஆச்சரியமில்லை. கிறிஸ்துமஸ் வாரத்தில், சென்னை செனட் மண்டபத்தில் நடந்த சங்கீத வித்வத் சபை மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட முக்கிய தீர்மானம் இதுதான். "புராதன கர்நாடக சங்கீதத்தின் மிக உயர்ந்த தரத்தைக் காப்பாற்றுவதும் நிலைநிறுத்துவதும் எல்லா சங்கீத வித்வான்கள், சங்கீதாபிமானிகள் ஆகியோரின் நோக்கமாக இருக்க வேண்டுமென்று இந் நிபுணர்கள் கமிட்டி (அதாவது சங்கீத வித்வத் சபை மகாநாட்டின் நிபுணர்கள் கமிட்டி) திடமாக அபிப்பிராயப்படுகிறது. அந்தத் தரத்தைக் குறைக்கும் படியோ பாதிக்கும் படியோ பாஷை என்ற விஷயத்தை அதில் புக

விடக்கூடாது" ஸ்ரீ டி. வி. சுப்பாராவ் என்பவரால் பிரரேபிக்கப் பட்ட இத் தீர்மானத்துக்கு ஸ்ரீ இ. கிருஷ்ண ஐயர் ஒருவர்தான் பாதகமாக ஓட்டுச் செய்தாராம். ஸ்ரீ கிருஷ்ண ஐயர் ஒருவரா யிருந்தாலும், தமிழ்நாடு முழுதுமுள்ள மக்களின்-முக்கியமாக, சங்கீத ரஸிகர்களின்—உள்ளக்கருத்தைத் தமது எதிர்ப்பின் மூலம் வெளிப்படுத்தினர் என்றே கூறவேண்டும். ஸ்ரீ கிருஷ்ண ஐயர் சாதாரணமானவரல்ல. பெரிய சங்கீத வித்வான்கள். 'கிரிடிக்கு' மாவார். அவர் வக்கிலாயிருந்தாலும், தம் வாணாள் முழுதும் சங்கீதக் கலை வளர்ச்சிக்கும், பரதநாட்டியக் கலை வளர்ச்சிக்கும் இடைவிடாது உழைப்பவர். ஆகவே, அவர், சங்கீத வித்வத் சபை மகாநாட்டின் நிபுணர் கமிட்டியிலுள்ள மேதாவிகளை விட எந்த வகையிலும் குறைந்தவரல்லர் என்று இங்கு குறிப்பிட வேண்டியது அவசியம். அவருக்கு இத் தீர்மானம் பிடிக்கவில்லை யென்றால், கர்நாடக சங்கீதத்தின் மிக உயர்ந்த நாதத்தைக் காப் பாற்றுவதும் நிலைநிறுத்துவதும் என்ற சாக்கில் தமிழ் இசை வளர்ச்சி முயற்சியைத் தகைய சதிசெய்து விட்டது சகிக்கா மலே தம் எதிர்ப்புணர்ச்சியைக் காட்டினர் என்றே கொள்ள வேண்டும்.

தமிழ் இசை வளர்ச்சி முயற்சியைத் தகர்க்கப் பாடுபட்டு வரும் ஒரு சிறு கூட்டத்தார், முதலில் தங்கள் விஷமப் பிரசாரத்துக்குப் பலந் தேட, சங்கீதக் கலை விஷயத்தில் சிறிதும் சிரத்தையில்லாத சில பெரிய மனிதர்களைக் கொண்டு வந்து பேச வைத்து, தமிழ் இசை இயக்கத்தைக் கண் டிக்கச் செய்தனர். அதில் அவர்கள் வெற்றி காணாது போகவே, பின்னர், ஆந்திரர்களைத் தமிழர்கள் மேல் ஏவி விட்டு, தமிழ் இசை வளர்ச்சி முயற்சியை அழிக்க முனைந் திருக்கின்றனர். ஆகவே தான், தெலுங்கு சாஹித்ய கர்த்தா வான ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளைத் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டாடி வந்தாலும், தியாகையர் கிருதிகளைப் பெரிதும் பாடி வந்தாலும், சங்கீதக் கலை உலகில், தெலுங்கர்களுக்கு நியாய மான ஸ்தானத்தைக் கொடுக்காது இதுவரை மறுத்து வந்த இவர்கள், இவ்வாண்டில் அதாவது சிதம்பரம் சங்கீதமாக நாட் டின் பயனாக, தமிழ் இசை இயக்கம் வலுப்பெற்று வரும் இக் காலத்தில் சென்னை சங்கீத வித்வத் சபை மகா நாட்டுக்குத் தலை வராக ஒரு தெலுங்கு சங்கீத வித்வானையும், திறப்பாளராக ஒரு தெலுங்கு பிரமுகரையும் தேர்ந்தெடுத்தனர். அது போலவே, திருவையாற்றில் ஸ்ரீ தியாகப் பிரம்ம ஆராதனை உற்சவத்தைத் தொடங்கி வைப்பதற்கும் ஒரு தெலுங்கு பிரமுகரைத் தேர்ந் தெடுத்தனர். ஸ்ரீ தியாகப் பிரம்ம ஆராதன சகாய சங்கீத விழாவுக்கும் தியாகையர் பரம்பரையில் வந்தவரான சென்னை

சர்க்கார் பிரதம காரியதரிசி ஸ்ரீ எஸ். வி. ராமமூர்த்தி என்னும் தெலுங்கரைத் தலைவராக ஏற்படுத்தியது இங்கு ஞாபகப்படுத்திக் கொள்ளத்தக்கது.

இவ்விதம் ஆந்திரப் பிரமுகர்களுக்கு இவ்வாண்டில் அக்கிர ஸ்தானம் அளித்ததற்குக் காரணம், அவர்கள் மீது ஏற்பட்ட காதல் இல்லை; ஆந்திரர்களின் மொழிப்பற்றைத் தூண்டி விட்டுத் தங்கள் நோக்கத்தைச் சாதித்துக் கொள்வதற்கேயாம். தமிழ் பாட்டு பெரும்பாலும் பாட வேண்டுமென்று கோரும் தமிழர்கள் மீது ஆந்திரர்கள், 'எங்கள் தெலுங்கு பாடல்களை வேண்டாமென்கிறீர்களா! பாருங்கள்; உங்களை என்ன பாடு படுத்துகிறோம்' என்று சீறி விழுவார்கள். அதை வேடிக்கை பார்த்து மகிழ்ந்து, 'பார்த்தீர்களா! சங்கீதக் கலை சம்பந்தமாகப் பிரமுகர்கள் அபிப்பிராயங்களை; சங்கீதத்தின் சிறப்பு தெரியாது இந்தத் தமிழர்கள் தமிழ்ப்பாட்டு; தமிழ்ப்பாட்டு என்கிறார்களே! சங்கீதத்துக்குத் தமிழ்ப்பாட்டு எடுக்காதையா' என்று கூறித் தங்கள் கட்சியை நிலை நாட்டி விடலாம் என்பது இச் சிறு கூட்டத்தாரின் அந்தரங்க எண்ணம். தாங்களும் தமிழர்கள் தான்; தாங்கள் பேசுவதும் தமிழ்மொழி தான் என்று கூறிக் கொள்ளும் இச் சிறு கூட்டத்தார், தமிழர்கள் தொடங்கி நடத்திவரும் தமிழ் இசை இயக்கத்தை அழிக்க, மொழிப்பற்றும் நாட்டுப் பற்றும் மிகுதியுமுடைய தெலுங்குகளைப் பயன்படுத்திக் கொண்டு, தங்கள் சதிச் செயலில் வெற்றி காண முயன்று வருகின்றனர். இவர்களது உள் நோக்கமும் சதி முயற்சியும் எவ்வளவு தூரம் வெற்றி பெறும் என்பதை, இறைவனே அறிவான்.

இங்ஙனம், தமிழ் இசை வளர்ச்சி முயற்சியைக் கெடுக்க முயலும் ஒரு சிறு கூட்டத்தார், ஆந்திரப் பிரமுகர்களைத் தங்கள் சதி முயற்சிக்குச் சாதகமாகப் பயன்படுத்த முயன்றாலும், தமிழ் இசை வளத்தை—தமிழ் மக்களின் தமிழ் இசை ஆர்வத்தை—இசை சம்பந்தமாக தமிழ் மக்களின் கோரிக்கையை - அடியோடு புறக்கணிக்க, ஆந்திரப் பிரமுகர்கள் உள்ளம் இடந்தரவில்லை. என்ன தான் மொழிப்பற்று இருந்தாலும் நியாய உணர்ச்சி எங்கு போய் விடும்?

சென்னை சங்கீத வித்வத் சபையின் பதினொந்தாவது சங்கீத மகாநாட்டில் தலைமை வகித்த பிடில் வித்வான் புரொபஸர் வெங்கடசாமி நாயுடு, தமது தலைமைப் பேருரையில், "கர்நாடக சங்கீதத்தில் சாஹித்யத்துக்கு இரண்டாம் பக்ஷமான ஸ்தானமே கொடுக்கப்பட்டிருக்கிறது என்பது உண்மை. ஆனால், சாஹித்யத்தை அடியோடு புறக்கணிக்கவும் முடியாது. சங்கீதத்தில் சாஹித்யத்துக்கு இடமில்லையானால் கீர்த்தனங்கள் எதற்கு? கீர்த்தனங்களுக்கு

இடமிருக்கும்போது அதன் அர்த்தத்தை அறிந்து கொள்வது அவசியம். அதனால், கீர்த்தனையின் பாவம், ராகம், தாளம் ஆகியவற்றை நன்கு ரஸிக்கலாம்'' என்று குறிப்பிட்டார்.

அது போலவே, திருவையாற்றில் தியாகப்பிரம்ம ஆராதனை உற்சவத்தை ஆரம்பித்து வைத்த ஸ்ரீ கோபால் ரெட்டியாரும், "தமிழ் இசை இயக்கத்தில் தமிழ்ப் பாட்டுக்கள் வளர்ச்சியடைய வேண்டுமென்பதை நான் ஆதரிக்கிறேன். இவ் விஷயத்தில் எனக்கு அநுதாபமும் உண்டு. தமிழர்கள் தமிழ்ப்பாட்டு வேண்டுமென்றால் அதை யார் மறுக்க முடியும்? தமிழல்லாத பாட்டுக்களைத் தான் கேட்க வேண்டுமென்று அவர்களை யார் சொல்வது சாத்தியம்?'' என்று தமது பிரசங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

ஆனால் ஸ்ரீ கோபால் ரெட்டியார் எவ்வளவுதான் தேசியவாதியாயிருந்தாலும் மொழிப்பற்றை விடாது, "தியாகையரிடமிருந்துதான் நமது இனிமை மிகுந்த இசை விசேஷமாகக் கிடைத்தது. கேட்பதற்கும் கேட்டு ரஸிப்பதற்கும் சிந்திப்பதற்கும் இறுதியாக லட்சியத்துடன் வாழ்வதற்கும் சாதனமாகவுள்ள இனிய இசையை அவர் மூலமாகவே நாம் அடைய முடிந்தது'' என்று கூறினர். இதைக்கேட்டு, 'அப்படியானல் தியாகையருக்கு முன் நம் நாட்டில், இனிய இசையே கிடையாதோ?' என்று எவர் உள்ளத்திலும் கேள்வி யெழாமலிராது. ஆனல், ஸ்ரீ ரெட்டியார் நல்ல காலமாக, 'ஆமாம்; தியாகையருக்குமுன் நாட்டில் இனிய இசையே கிடையாது' என்று சாதிக்கவில்லை. "தமிழ், தெலுங்கு ஆகிய கலைகளிலிருந்த சிறந்த அம்சங்களை அவர் ஸ்வீகரித்துக்கொண்டார். பலதரப்பட்ட கலைகளை ஒன்று தொகுத்து தன் வசப்படுத்திக்கொண்டார்'' என்று ஸ்ரீ ரெட்டியார் மொழிப்பற்றையும் மீறி உண்மையை உரைத்துவிட்டார். உண்மையை நீளித்து வைக்க முடியாதல்லவோ? தியாகையர் தமது கீர்த்தனங்களை; அவர் காலத்தில் நிலவிய தமிழ் சங்கீத முறையை ஆதாரமாகக் கொண்டே—தமிழ் இசை இலக்கணப்படி ராக தாளங்களையமைத்தே பாடியிருக்கிறார் என்று நாம் கூறிவந்த கூற்றுக்கு, ஸ்ரீ கோபால் ரெட்டியார் பேச்சைவிட வேறென்ன ஆதாரம் வேண்டும்?

தமிழ் இசை வளர்ச்சி முயற்சியை எதிர்ப்பவர்களெல்லாம், "சங்கீதத்துக்கு நாதமே பிரதானம்; பாவமே பிரதானம்'' என்கின்றனர். சங்கீதத்துக்கு நாதமே பிரதானம் என்பதை நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனல், அது நம் நாட்டுச் சங்கீத முறையைத்-சாஹித்யத்தைத் தழுவியதாய் இருந்தால்தான் நம்மால் ரஸிக்க முடிகிறது. நாதம் பிரதானம் என்பதற்காக, ஆங்கில சங்கீதம், ஜெர்மன் சங்கீதம், பிரெஞ்சு சங்கீதம் முதலியவை

களை நாம் ரஸிப்பதில்லை. நம்மால் ரஸிக்கவும் முடிவதில்லை. அதற்குக் காரணம் நம் நாட்டுச் சங்கீத முறையை யொட்டியதாயில்லாததனுலேயே யாகும். அதுபோலவே, பாவம் பிரதானமென்றால், நமக்குப் பழக்கப்பட்ட நம் சங்கீத முறையை யொட்டிய ராக பாவத்தைத்தான் நம்மால் அநுபவிக்கமுடியும். நமது தாய்மொழியில் சாஹித்யமில்லாவிட்டால், நம் தாய்மொழி இசைப் பாடல்களைக் கேளாவிட்டால் நமக்கு இதய பாவம் எங்கிருந்து ஏற்படும்?

* * * *

சங்கீத வித்வான் அரியக்குடி ஸ்ரீ இராமாநுஜ ஐயங்கார் சங்கீத வித்வத் சபை மகாநாட்டில் 'சங்கீதமும் சாஹித்யமும்' என்பதுபற்றி ஒரு பிரசங்கஞ் செய்தார். அதில் அவர், "சங்கீதமே ஒரு பாஷை. அதுவே ஒரு பாஷையாக இல்லாவிட்டால் ராகங்கள் மூலம் சங்கீதத்தை வெளியிட்டுக் காட்டமுடியாது. அது பாஷையாக இருப்பதால்தான் ராகங்களின் மூலம் ஒருவர் சங்கீதம் பாடி, மற்றொருவருக்குப் புரியச் செய்ய முடிகிறது. சங்கீதம் ஒரு தனிப்பட்ட பாஷையாதலால், மற்றெந்த பாஷையும் சங்கீதத்துக்குச் சமதொடர்பும் சம்பந்தமும் கொண்டதென்பதை நான் சொல்லாமலே அறிவீர்கள். ஆகவே, பாஷைகள் சம்பந்தப்பட்ட மட்டில் சங்கீதத்திற்கு எவ்வித பாரபக்ஷமுங் கிடையாது. சங்கீதத்துக்கு அநுசரணையாகச் சகல பாஷைகளும் சம அந்தஸ்துக் கொண்டவையா யிருப்பதால், நாம் இதில் பாஷைப் பிரச்சினையைப் புகுத்தி, அனுவசியமாக அவற்றின் நட்பைக் கெடுக்க முயற்சிப்பது மிகப் பாதகமாகும். சங்கீதத்திற்கு நாதம்தான் பிரதானமானது. சங்கீதம் பல பாஷைகளுக்கும் முக்கிய ஸ்தானமாக உள்ளது. ஆகவே, பாஷையைக் கொண்டு சங்கீத சர்ச்சைகளைச் செய்வதற்கிட மில்லை" என்று குறிப்பிட்டுப் பேசி யிருக்கிறார். இவரது இக்கூற்று எவ்வளவு தூரம் நியாயமானது; இதில் அறிவு வாதத்துக்கு எவ்வளவு தூரம் இடமிருக்கிறது என்பதை அறிஞர்கள் அறிவர்.

சங்கீதம் ஒரு பாஷையாம். இப்படி ஒரு பாஷை உலகிலிருக்கிறதா? சங்கீதம் ஒரு கலை என்றுதான் இதுவரை கேட்டு வந்திருக்கிறோம்; அறிந்துமிருக்கிறோம். சங்கீதம் ஒரு பாஷை என்று இதுவரை நாம் கேட்டதில்லை. சங்கீதம் ஒரு பாஷையாயிருந்தால், உலக முழுதுக்கும் பொதுவாயன்றோ இருக்கவேண்டும்? அல்லது ஒரு நாட்டுக்காயினும் பொதுவா யிருக்கவேண்டாமா? ஆனால், நடைமுறையில் அப்படியில்லை. சங்கீதம் தனிப்பட்ட பாஷையாயிருந்தால், ஆங்கில சங்கீதம், கிரேக்க சங்கீதம், இத்தாலி சங்கீதம், ஸ்பானிஷ் சங்கீதம், ஜெர்மன் சங்கீதம், பிரெஞ்சு சங்கீதம், ஜப்பான், சீன சங்கீதம், இந்திய சங்கீதம் என்

றும் ஏன் அவ்வவ் நாட்டுப் பெயரால் அழைக்கப்பட் டிருக்கிறது? அவ்வவ் நாட்டு மொழிக்கேற்ப சங்கீத முறை வெவ்வேறு விதமாக வகுக்கப்பட் டிருக்கிறது? நம் நாட்டிலும், இந்திய சங்கீதம் என்பது பொதுவா யில்லாமல், ஹிந்துஸ்தானி சங்கீதம், வங்காளி சங்கீதம், மராத்தி சங்கீதம், குஜராத்தி சங்கீதம், கன்னட சங்கீதம், மலையாள சங்கீதம், தெலுங்கு சங்கீதம், தமிழ் சங்கீதம் என்று தனித் தனியாக அழைக்கப்படுவதேன்? சங்கீத முறை வெவ்வேறு விதமாக இருப்பதேன்?

சங்கீதத்துக்கு மற்றெல்லா பாஷைகளும் சம தொடர்பும் சம்பந்தமுங் கொண்டவை என்கிறார் அரியக்குடி. ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் ஹிந்துஸ்தானி பாஷையைத் தவிர வேறு பாஷைகள் சமதொடர்பும் சம்பந்தமுங் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. அதுபோலவே, வங்காளி, குஜராத்தி, மராத்தி முதலிய சங்கீதங்களிலும் அததற்குரிய பாஷையில்தான் சாஹித்யம் பாடப்பட்டு வருகிறது. இடைக்காலத்தில் ஏற்பட்ட ஏதோ ஒரு மாறுதலால் தமிழ் நாட்டில் மட்டுந்தான் தமிழ் சங்கீதத்தில் தமிழ்மொழிப்பாடல் இடம்பெறாத ஒரு விசித்திர நிலை ஏற்பட்டிருக்கிறது. தமிழ் சங்கீதத்தில் தெலுங்கு, கன்னடம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகள் எப்படியோ இடம்பெற்று தமிழ் மொழிக்குச் சிறிதும் இடமின்றிச் செய்துவிட்டன. தமிழ் மக்களின் தாய் மொழிப் பற்றின்மையே இதற்குக் காரணமாகும். மேற் குறித்த விசித்திர நிலை தமிழ் சங்கீதத்தில் வேரூன்றி விட்டதனால்தான், அரியக்குடி ஸ்ரீ இராமாநுஜ ஐயங்கார் போன்றவர்கள், 'சங்கீதத்தில் பாஷைப் பிரச்னையைப் புகுத்தி அனாவசியமாக அவற்றின் நட்பைக் கெடுக்க முயற்சிப்பது மிகப் பாதகமாகும்'' என்று வாய் வேதாந்தம் பேசி, பிற மொழி சாஹித்யங்களுக்கு வக்காலத்து வாங்கிவருகிறார்கள்.

மற்ற வித்வான்களைவிட அதிகமாகத் தமிழ்ப் பாட்டு பாடுவதாகச் சொல்லிக்கொள்ளும் ஸ்ரீ அரியக்குடி, தமிழ்மொழியில் சங்கீதத்துக்குப் பொருத்தமான பாடல்கள் இல்லை என்று நிரூபிக்க மிகவும் முயன்றிருக்கிறார். "நம் தமிழ் நாட்டில் மிகப் பெரியார்களும் பக்தர்களுமான நால்வர்களால் தேவாரம், திருவாசகம், திருத்தாண்டகம் முதலியன பக்தி ததும்பும்படி செய்யப்பட்டுள்ளன. இவற்றில் தேவாரப் பண்களென்று சொல்லப்படுவது கண்ணிகளாக உள்ளன. திருப்புகழும் அவ்வண்ணமே யிருக்கிறது. அதில் கீர்த்தனை ரூபமான பல்லவி, அநுபல்லவி, சரணம் என்று சொல்லப்படும் தமிழ்க் கிருதிகள் சொற்பமாக வழங்கி வருவதால், அதை அதிகமாகக் கையாள இடமில்லை'' என்று கூறியிருப்பதிலிருந்து இதை அறியலாம். சங்கீதமென்றால், பல்லவி, அநுபல்லவி, சரணம் என்ற பிரிவுடன் கூடிய கீர்த்தனை

ரூபமாகத்தான் இருக்கவேண்டுமென்று நியதியுண்டா! கிடையாது. பலவிதமாகவும் இருக்கலாம். தேவாரமும் திருப்புகழும் கண்ணிகளாக உள்ளன என்று கூறுவது எவ்வளவு அறியாமை! கண்ணிகளின் லக்ஷணத்தைக் கூட அறியாது அரியக்குடியார் பேசுவது பரிதபிக்கத்தக்கது.

கடைசியாக, அரியக்குடியார், "தமிழ்பாஷையில் தகுதியான கிருதிகளும் வர்ணங்களும் நிரம்பத் தோன்றத் தோன்ற அவற்றை நாங்கள் பிறர் கிளர்ச்சியின்றியே கையாளுவதற்கு ஆட்சேபமில்லை" என்று கூறுகிறார். இவர் எடுத்துக் காட்டுகிறபடி, தியாகையர், தீக்ஷிதர், சாமா சாஸ்திரி முதலியவர்களைப்போல் வர்ணம், கீர்த்தனங்களைத் தமிழில் பாடிய பெரியார்கள் இல்லவே இல்லையா? தமிழில் தகுதியான கீர்த்தனங்களும் வர்ணங்களும் இல்லாமலா இவர் மற்ற வித்வான்களைவிட அதிகமாகத் தமிழ்ப் பாடல்களைப் பாடுவதாகச் சொல்கிறார்? ஒரு சங்கீத கச்சேரி செய்வதற்கு வேண்டிய தமிழ்க் கீர்த்தனங்களும், வர்ணங்களும் உருப்படிகளும் கூடவா இல்லை? நிறைய உண்டு. ஆனால், கச்சேரி செய்யும் வித்வான்கள் நீண்டகாலமாக, தியாகையர் கிருதி முதலியவைகளைப் பாடி வந்ததன் பயனாகவோ என்னவோ, போதுமான தமிழ்ப் பாடல்களைப் பாடஞ் செய்திருக்கவில்லை. தமிழ்க் கீர்த்தனங்களைப் பாடஞ் செய்து பாடுவது அவர்களுக்குக் கஷ்டமாகத் தோன்றுகிறது. இது காரணமாகவே, அரியக்குடி போன்ற சங்கீத வித்வான்கள், 'கச்சேரி செய்வதற்கு வேண்டிய தமிழ்ப்பாட்டுக்கள் இல்லை; அப்படியிருந்தாலும் சபையோரை மகிழ்விக்கச் செய்யக்கூடியனவாயில்லை; அப்படி பாடினாலும் சபையோர் முற்றிலும் தமிழ்ப் பாடல்களை ரஸிக்கமாட்டார்கள்' என்றெல்லாம் சாக்குபோக்கு சொல்லுகின்றனர். தமிழ் நாட்டுச் சங்கீத ரஸிகர்கள் மீது அநியாயமாகப் பழியைப் போடுகிறார்கள். ஆகவே, அன்பர்களே! அரியக்குடி போன்ற சங்கீத வித்வான்களின் விபரீத மனோபாவமும் பிடிவாதமும் மாற வேண்டுமானால், தமிழ் இசை வளர்ச்சி முயற்சியை எதிர்த்து வேலை செய்துவரும் சிறு கூட்டத்தாரின் விஷமப் பிரசாரம் ஒழியவேண்டுமானால் சங்கீதாபிமானிகளும், ரஸிகர்களும் கலைவாணர்களும் இவ்விஷயத்தில் ஒரு திடமான கொள்கை கொள்ளவேண்டும். சிதம்பரம் சங்கீத மகாநாட்டில் வகுத்த திட்டப்படி—தேவகோட்டை, திருச்சி மகாநாடுகள் வற்புறுத்தியுள்ளபடி, தமிழ்ப் பாடல்களையே பெரும்பாலும் பாடும் சங்கீத வித்வான்கள் கச்சேரிகளுக்கே செல்வது என்றும் அச் சங்கீத வித்வான்களையே தங்கள் இல்லங்களில் நடக்கும் வைபவங்களுக்கு அழைத்துப் பாடச்செய்து ஆதரிப்பது என்றும் உறுதிகொள்ள வேண்டும். அத்துடனில்லாது, செயலிலும் காட்டவேண்டும்.

# ஆனந்தத் தை

## (K. S. வீராசாமி.)

திங்கள் பன்னிரண்டில் தைத்திங்கள் தனித் திங்களாய்த் திகழ்கின்றது. அயனங்களில் முதலான உத்தராயனத்தில் தை தலையா யிருக்கிறது. பொங்கற் புது நாளைத் தன் முதல்நாளாய்ப் பெற்றிருக்கிறது. "தை பிறந்தால் வழி பிறக்கும்," எனும் பழமொழியை அடைந்திருக்கிறது. கன்னிப்பெண்களும் பிரம்மச்சாரிகளும் திருமணம் முதலான சுப காரியங்களுக்கும், வியாபாரிகள் விளைபொருள்களைத் தேக்கி லாபத்தை விருத்தி செய்யவும், விவசாயிகள் பன்னாள் பாடுபட்ட பலன்களைப் பெறவும், கொத்தர், கொல்லர் முதலிய தொழிலாளிகள் தொழில் மிகுதியால் ஊதியம் அதிகம் பெறவும், ஏழை மக்கள் குறைந்த பணத்திற்கு மிகுந்த தான்யங்கள் பெறவும், ஆடு மாடுகள் பசி நீங்க உணவுண்ணவும், இன்னும் எல்லா ஜீவராசிகளும் பற்பல வகைகளிற் பலன்பெற எதிர்பார்க்கின்றன தைப் பெருந் திங்களை.

குச்சு மச்சு முதலிய எல்லா வீடுகளும் ஒட்டடை, சிற்சிறு இடிசல் முதலியன போக்கி வெள்ளை யடிக்கப்பட்டு பிரகாசிக்கின்றன. கிராமங்களின் தெருக்கள் கூட சுத்தம் செய்யப்படுகின்றன. ஆடு மாடுகள் நீராட்டப்பட்டு அலங்கரிக்கப் படுகின்றன. பன்னிரண்டு மாதங்களுக்கும் வேண்டிய உணவுப் பொருள்களிற் பெரும்பாலும் இம்மாதத்திற்றான் அதிகம் கிடைக்கிறது. மூலை முடக்குகளில் கிடக்கும் சாக்குப் பைகளெல்லாம் தானியங்களால் நிரப்பப்பெற்றுத் தைக்கப்படுவதால் இம்மாதத்திற்கு "தை" எனப் பெயர் ஏற்பட்டிருக்கிறது போலும். உத்தமர்கள் பார்வைக்குச் சின்னவர்களாய்த் தோன்றப்படுவார்கள். அதுபோல், மாதங்கள் பதினொன்றும் ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துக்களாலான பெயர் பூண்டிருக்க, இம்மாதம் மட்டும் ஒரே ஒரு எழுத்தாலான பெயருடன் திகழ்கிறது.

இவ்விதம் மகா மகத்துவம் பொருந்திய மாதத்தை ஒவ்வொரு வருஷத்திலும் கொண்டாடி குதூகலித்து வந்ததைப்போலவே இவ் வருஷத்திலும் நடந்துகொள்ள நாம் கடமைப்பட் டிருக்கிறோம். ஆனால், தற்காலம் உலகத்தில் யுத்தத்தீயானது மூண் டிருப்பது நம்மெல்லோர்க்கும் ஓர் பெரிய கலக்கமா யிருக்கிறது. இருப்பினும், பொங்கற் புதுநாளிலும் அது முதற்கொண்டும் நாம் வழக்கம்போல் சந்தோஷத்துடனிருந்து வர, நம் பாரதநாட்டைக் காத்தருள் புரிய, எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுவோமாக.

2

## பொங்கல் வாழ்த்து

(சே. வசந்தகோகிலம்)

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.*

பேர்வளருஞ் சென்னை நகர்ப் பிறந்து முனி
சாமி முகில் பெய்யும் பாலால்
பார்வளர்ந்து தமிழரங்கிற் பரந்துபடிப்
போர் மனதிற் பண்பா ரின்பம்
ஏர்வளர ஊற்றுமெம தானந்த
போதினியா மிப்பார் நங்காய்!
சீர்வளருந் தமிழரிருந் திருநாளாம்
பொங்கலினிற் சிறந்து வாழி! (1)

ஆனந்தம் பொங்குறுநல் லருந்தமிழர்
பொங்கலெனு மான்ற நாளின்
பானந்த மேபொழியும் பசும் பயிர்கள்
செழிப்பமுகில் பயத்தைச் சோர
தேனந்த மார்பொழில்கள் செறியுலகோ
டிருந்தமிழும் சிறப்புற் றோங்க
வானந்த போதினியா மங்காயுன்
வண்புகழ் மேன் வாழி! வாழி!

3

(அரு. ஆறுமுகம்.)

திங்கள் திருநா ளென்று
தெய்வந் தொழுது வாழ
எங்கள் முந்தை யோரால்
எண்ணிலா திருநாள் கண்டு
தங்கள் சுற்றஞ் சூழ
தவறாது வேண்டி வந்த
பொங்கல் பெருநா ளின்றும்
பொலிவுடன் பொங்கு தம்மா. (1)

மங்கள மணத்தை வீச
மஞ்சளைச் சாற்று கின்றோம்
தங்களி னன்பை ஊற்ற
தண்சுவைக் கரும்பு தாரோம்;
இங்குள எவர்க்கு மீய
இருவித அமிழ்த மான
பொங்கலுஞ் சமைத்து நன்கு
புகட்டவும் வேண்டு தம்மா. (2)

குளிர்தரு மழையுங் கொண்டு
குன்றிக் கரைந்து, மீண்டும்
தளிர்தரு தழையு முண்டாய்
தாவரம் பசுமை காண,
மிளிர்உறு கதிரை விண்டு
மின்னொளி மேவச் செய்யும்
ஒளிர்உரு இறையை வேண்டும்
"உன்னதப் பொங்க" லம்மா. (3)

பொங்கும் மங்களம் எங்குந் தங்குக.

---

# மாணிக்கவாசக சுவாமிகள்

(நாரண—துரைக்கண்ணன்.)

(சென்ற இதழ் தொடர்ச்சி.)

அர:—அடாடா! அது அடையாததால் அந்த கரையையும் வெள்ளங் கவ்வி யழிக்கிறதே!

மந்:—ஆமாம், அரசே! உடனே அதை அடைக்காவிட்டால் கட்டியுள்ள அணையையும் வெள்ளம் அறுத்துக்கொண்டு போய் நாசஞ் செய்துவிடும்.

அர:—(சீற்றங்கொண்டு) எங்கே அந்த வந்தி யாள்?

பரி:—(சிவபெருமானைச் சுட்டிக் காட்டி) இவன்தான் அரசே!

அர:—அயோக்கியா? ஏன் கரையை யடைக்காது வீண்பொழுது போக்கிக்கொண்டிருக்கிறாய்? இதோ என் கையிலுள்ள பொற் பிரம்பல் உன் முதுகுத் தோலை உரித்து விடுகிறேன், பார்!

[ஓங்கி யடிக்கிறான்.]

சிவ:—ஒரு கூடை மண்ணை உடைப்பில் கொட்டினால் கரை அடைபட்டுப் போகிறது? இதற்கா இவ்வளவு கோபம்? அரசே!

[கூடையோடு மண்ணைக் கொட்டிவிட்டு மறைகிறார்.]

பரி:—ஐயோ! என் முதுகில் பிரம்படி பட்டதே!

மற்:—அரசன் வந்தியாளை அடித்த அடி தவறி என்மீது பட்டுவிட்டதே! [எல்லோரும் அவ்விதமே சொல்லி வீறிடுகின்றனர்.]

அர:—என்ன ஆச்சரியம்? நான் அடித்த அடி என் முதுகிலேயே பட்டதே!—ஆமாம். அந்த வந்தி ஆள் எங்கே? பாருங்கள்.

மந்திரி:—இங்கேதானே இருந்தான்? அவனைக் காணோமே!

பரி:—உடைப்புக் கூட அடைப்பட் டிருக்கிறதே!

மற்:—பிரம்பால் அடித்தவுடன் அவன் போட்ட ஒரு கூடை மண்ணே அணையாகி மலைபோல் உயர்ந்திருக்கிறது.

இன்:—வந்தி வீட்டுக்குப் போய்ப் பார்ப்போம். அந்தக் கூலியாள் அடிக்குப் பயந்து அங்கே ஓடி ஒளிந்திருக்கவுங் கூடும்.

## வந்தி வீடு.

வந்தி:—அரசன் ஆட்கள் வருகிறார்களே! நம்மிடந்தான் வருகிறார்களோ! அரசனால் இன்னும் நமக்கு என்ன ஆபத்து வருமோ! போன கூலியாள் என்ன செய்தானோ? இது எப்படி முடியுமோ! சிவபெருமானே! நீதான் என்னைக் காப்பாற்றவேண்டும்.

[இச்சமயம் இறைவன் திருவருளால் நந்திகணத்தவர் ஒரு திவ்விய விமானங் கொண்டு வந்தனர்.]

நந்திகணத்:—அன்னையே! வா! இவ்விமானத்தில் ஏறு! கைலாயத்துக்குச் செல்வோம்.

வந்தி:—ஆண்டவனே! அகதியாகிய எனக்கும் அருள்பாலித்தாயே!

[விமானம் ஏறிச் செல்கிறள். தேவர்கள் பூமாரி பொழிகின்றனர். துந்துபி வாத்தியம் முழங்குகிறது.]

[இதே சமயத்தில் வந்த அரசன் ஆட்கள் இவ் வதிசயத்தைக் கண்டு விம்மித முறுகின்றனர்.]

பரி:—இதென்ன அதிசயம்! வந்திக்கு வந்த வாழ்வுதான் என்னே! சிவகணத்தவர் புடைசூழ அக்கிழவி விமானத்தில் விண்ணுலகஞ் செல்கிறளே!

மற்:—அவள் செய்த தவமே தவம்!

பரி:—வாங்கண்ணே! இவ்வற்புதத்தை அரசரிடம் தெரிவிப்போம்!

வையை யாற்றங்கரை.

அர:—இன்று நடந்த நிகழ்ச்சிகளெல்லாம் புதுமையா யிருக்கின்றனவே! ஒரு கூடை மண்ணை உடைப்பிற் கொட்டினல், கரை மலைபோல் உயர்வதெப்படி? நான் அந்தக் கூலியாளை அடித்த அடி நான் உட்பட அனைவர் முதுகிலும் பட்டது எவ்வாறு? அடிபட்ட கூலியாளின் அடிசுவடு கூடக் காணேம். இவற்றின் இரகசியங்கள் என்ன? எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே!

சிவபெருமான்:—(அசரீரியாக) மன்ன! உன் பொருள்கள் எல்லாம் நல்ல வழியில் வந்தனவாதலால், நம் அன்பன் வாதவூரன் நமக்கும் நமது அடியவர்கட்கும் விநியோகித்தான். நீ இதை யறியாது அப்பொருளின் பொருட்டு அவனுக்குத் தண்டனை யளித்தாய். அதை நாம் சகிக்காமலே, நரிகளைப் பரிகளாக்கியும் வையையைப் பெருகச் செய்தும் வந்தியாளாக வந்து அடிபட்டும் திருவிளையாடல்கள் புரிந்தோம். இத்தனை காரியங்கள் செய்ததும் வாதவூரன் பொருட்டே யாகும். இவ்வுத்தம புருஷனின் பெருமையை நீ உணரவில்லை. இனியேனும் நீ அவனது மேன்மைத் தன்மை அறிந்து, அவன் விருப்பப்படிச் செல்ல விடுவாயாக.

# அபுபென் ஆதம்

(உ. பி. உசேன்மீர்)

அபுபென் ஆதம் (அவன் குலம் ஓங்குக!)
அமைதி நிலவுநல் ஆழ்ந்த துயிலிடை
கனவிர மேவோர்நாள் மெள்ள எழுந்து
நிலவொளி விரிந்து இலகுதன் அறையில்
அன்றலர் கமல மென்றெழில் வதனக்
கன்னிகை யொருத்தி கவின்பெற நின்று
பொன்னிற ஏட்டிலே பொறிப்பது கண்டான்.
கண்டவன் அவளிடம் விண்டனன், "அம்மையீர்!
அவ்வெழில் ஏட்டிலே அமைப்பது யாதெ"ன
தண்ணொளி உமிழுங் கண்களை உயர்த்திப்
பெண்ணணங் குரைத்தாள், "பேரருட் கடவுள்
அடியினைப் போற்றும் அன்பரின் பெயரெ"ன
"என்னுடைப் பெயரும் இருக்குது கொல்லோ!"
என்றுபென் ஆதம் இனிமையாய்க் கேட்க,
"இல்லை"யென் றவனிடம் இயம்பினள் அணங்கே;
அவ்வுரை கேட்டும் அகமிக மகிழ்வுடன்,
"என்னுடன் பிறந்த மன்னுயிர்த் தொகுதிபால்
அன்புகொள் பவன்யா னென்றுநீ அதிற்குறி"
எனப்பென் ஆதம் இயம்பலுங் குறித்து
எழிலுருக் கரந்தனள் எந்திழை யணங்கு.
வழிநாள் இரவிடை விழியலர்ந் தெழுந்த
அபுபென் ஆதமுன் அளவிலாச் சுடரென
ஆரணங் குதித்து, ஆண்டவ னுவந்து
அருட்பே ரளித்த அன்பரின் பெயர்களை
அவனிடங் காட்டினள் அம்மவோ! நோக்குவீர்!!
அபுபென் ஆதம்பேர் அனைத்தினும் முந்துற
நின்றதே! இந்த நீணில வரைப்பில்
மக்கட் தொண்டே மாண்புடைத் தாகும்
தெய்வத் தொண்டினும் சீருடைத் தாகுமே.

(ஆங்கிலக் கவிதையைத் தழுவி எழுதியது.)

# விளக்கின் சரிதை

(ந. பு. நவநீத கிருட்டினன், எம். ஏ.
விரிவுரையாளர், அண்ணாமலை சர்வகலாசாலை

"வண்ணமுஞ் சாந்து மலருஞ் சுண்ணமும்
பண்ணியப் பகுதியும் பகர்வோர் விளக்கமுஞ்
செய்வினைக் கம்மியர் கைவினை விளக்கமுங்
காழியர் மோதகத் தூழுறு விளக்கமுங்
கூவியர் காரகற் குடக்கால் விளக்கமுந்
தொடைநவின் மகடூஉக் கடைகெழு விளக்கமு
மிடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமு
மிலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்
விலங்குவலைப் பரதவர் மீன்றிமில் விளக்கமு
மொழிபெயர் தேத்தோ ரொழியா விளக்கமுங்
கழிபெரும் பண்டங் காவலர் விளக்கமு
மெண்ணுவரம் பறியா வியைந்தொருங் கீண்டி
யிடிக்கலப் பன்ன விரயிற் மருங்கிற்
கடிப்பகை காணுங் காட்சி........"

—'சிலப்பதிகாரம்.'

மக்கள் அறிவு மலர்ச்சித் தொடக்கத்தின் அறிகுறியாய், இருளை நீக்கும் விளக்கங்களைக் கண்டு பிடித்தனர். தீயைக் கட்டுப்படுத்திப் பயன் பெற்றதே, நாகரிகத்தின் முதற்றோற்றமெனலாம். பின், அவர், அத்தீ கொழுந்து விட்டெரியும்போது ஒளியையும் தருகின்றது எனக் கண்டனர். இவையே முதன்முதலாய்த் தோன்றிய விளக்குகள். சில வகையான மரக் கட்டைகள் நின்று எரிவதைக் கண்டனர். அக் கட்டைகளைத் தீவட்டிகளாய்ப் பயன் படுத்தினர். எண்ணெயூற்றி யெரியும் தீவட்டிகள் பின்னர் தோன்றின. அதன்பின் எண்ணெய்க் கலங்களில் திரி போட்டெரிக்கும் விளக்குகள் நிலவின, காலடைவில் மெழுகுவர்த்தி விளக்குகளும் நானாவித மண்ணெண்ணெய் விளக்குகளும் தொடர்ந்தன. இவ் விளக்குகள் எல்லாவற்றிலும், நீரியத்தையும் (Hydrogen) கரியத்தையும் (Carbon) கொண்ட நெய்யே மூலப்பொருளாம். நெய் திரியின் வழியே மேலேறுகின்றது. விளக்கேற்றப்படும்போது, திரியின் நுனியிலுள்ள நெய் அனலினால் சூடேற்றப் படுகின்றது. இதனால் நெய் ஆவியாய் மாறுகின்றது. அதில் ஒரு பகுதி சூழ்ந்துள்ள உயிரியத்துடன் (Oxygen) கலந்து கரியிருயிரி (Carbon dioxide) யாயும் நீராவியாயும் மாறுகின்றது. பெருந்தொகையாய மற்றோர் பகுதி நீரிய வாயுவாயும், நுண்ணிய கரியப் பொடியாயும் மாறுகின்றது. இவ்வாறான இயைபு மாற்றங்களால் (Chemical changes) ஏற்படும் சூட்டால், விளக்கு எரிந்துகொண்டே யுள்ளது. சூட்டின் மிகுதியால் வெப்பநிலை அதிகமாகின்றது. அதனால் விளக்கின் சுடரினின்று ஒளிக்கதிர்கள் வெளிப்படுகின்றன.

பல நூற்றாண்டுகள் கடந்தன. வாயுக்களை எரிக்கும் விளக்குகள் தோன்றின. கரி, எண்ணெய் இன்னோரன்னவற்றைப் பெரும் அடுப்புக்களில் சூடேற்றிப் பெற்ற வாயு குழாய்கள் வழியே பல இடங்களுக்கும் செல்கின்

றது. அவ்வவ்விடங்களில் அதைஎரித்தற்கேற்ற விளக்குகள் அமைக்கப்படும். ஒரிடத்திலேயே, சுண்ணக் கரியடுவில் (Calcium Carbide) நீரைச் சொட்டுவதால், கரியடுவாயுவை (Acetylene gas)ப் பெறலாம். இதுவும் எரிவாயுவாய்ப் பயன்படும். அதைப் பயன்படுத்தும் விளக்குகளும் செய்யப் பட்டன. அவற்றினாலும் பிரகாசமான வெளிச்சத்தை மக்கள் பெற்றனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் "வெண்டணல் விளக்குகள்" (Incandescent Lamps) கண்டு பிடிக்கப்பட்டன. அவற்றிற்கு இன்றியமையாத சாதனமாகிய "சுடர்க்கவி" (Mantle) வெல்ஸ்பாக் (Welsback) என்பவரால் அளிக்கப்பட்டது. இவ்விளக்கினின்று எவ்வாறு ஒளி பெறுகின்றோம் என்பதைப்பற்றி இனி கூறலாம். கரியடிவியலான (Organic) பொருளால் ஆக்கப்பட்ட சுடர்க்கவி, தொண்ணூற்றொன்பது பங்கு மின்னிய உயிரியும் (Thorium oxide) ஒருபங்கு சீரிய உயிரியும் (Cerium Oxide) கொண்ட கலவைச்சாற்றில் நன்கு தோய்த்து எடுக்கப் படுகின்றது. சுடர்க்கவி விளக்கில் எரிவாயு வொன்று எரிக்கப்படும். அதுவே முதலில் தீப்பிடிக்கும் விளக்கேற்றப்பட்டவுடன், கரியடிப் பொருள் எரிந்து போய் விடும். நிறமற்ற சுடரே எரிவாயு எரிவதால் தோன்றும். அதனால் வெப்ப நிலை அதிகரிக்கும். வெப்பநிலை உயரும்போது, சுடர்க் கவியிலுள்ள உயிரிகள் மிக்க ஒளியுடன் வெண்டணற் கதிர்களை வீசு கின்றன.

மின்சார நூற்றாண்டெனும் இருபதாம் நூற்றாண்டு தொடங்கிற்று. எடிஸனும் (Edison) ஸ்வானும் (Swan) மின்னொளிர் விளக்குகளைத் தோற்றுவித்தனர். வெற்றிடமாக்கப்பட்ட கண்ணாடிக் குமிழியினுள் மென்கரியக் கம்பியை (Carbon Filament) அவர்கள் அமைத்தனர். இம் மென் கம்பியினூடே மின்னோட்டம் செலுத்தப்பட்டது. அதனால் அக் கம்பி சூடேறி வெண்டணற் கதிர்களைப் பரப்பிற்று. கரிக்கம்பியிலேற்பட்ட உயர்ந்த வெப்ப நிலையில் காற்றிலுள்ள உயிரியத்துடன் அது கலந்து எரிந்தழிவதைத் தடுக்கவே, குமிழி வெற்றிடமாக்கப் படுகின்றது. மேலும் மின்னோட்டம் கம்பியில் விளைவிக்கும் சூடு, காற்றின் வழியே வெளிசென்று வீணாக்கப்படாது, அக் கம்பியின் வெப்ப நிலையை அதிகரிக்க மட்டும் பயன் படுவதற்காகவும், குமிழியிலுள்ள காற்று அகற்றப்படுகின்றது. இவ்வாறு செய்தும் கரியக் கம்பிகள் நீடித்து நிற்கவில்லை. சொற்ப காலத்திலேயே உதிர்ந்து விட்டன. இதைத் தவிர்க்கும் ஆராய்ச்சிகளில் பலர் ஈடுபட்டனர். அவற்றின் விளைவாய், 'கல்லுறுதி'ய (Tungsten) உலோகத்தாலாய கம்பிகள் நீடித்து நிற்கும் தன்மையின வெனக் கண்டு பிடிக்கப்பட்டது. அவை இப்பொழுது உபயோகிக்கப்படும் மின்னொளிர் விளக்குகளில் வைக்கப்படுகின்றன. பரந்து கட்டப்பட்ட கம்பியை விட சுருளே மேல் எனவும் கண்டு பிடிக்கப்பட்டது. இன்னோரன்ன பல செம்மைகளைக் கொண்ட விளக்குகளே பெரிதும் பயன்பட்டு வருகின்றன.

வேறு பல வகையான மின் விளக்குகளும் உள. அவற்றில் பெரிதும் கையாளப்பட்டு வருபவை மின்வளை விளக்குகளும் (Arc Lamps) மின்ஆவி விளக்குகளுமே (Vapour Lamps) யாம். இரு கரிக்கம்புகளின் நுனிகளை மின்சாரத் தோற்றுவா யொன்றின் இரு முனைகளுடன் (Poles) முறையே இணைத்து, அக் கம்புகளின் மற்ற நுனிகளை ஒன்றுடனொன்று இருத்திப்

பின் சற்றுத் தொலைவாய் இருக்குமாறு இழுத்து விட்டால், அந் நுனிக
ளிடை மின்சார வீட்டம் (Discharge) ஏற்படுகின்றது; இடை வெளி
பிரகாசமான ஜோதிமயமா யுள்ளது. இதுவே கரிய மின் வளை விளக்கு.
வெற்றிட மாக்கப்பட்ட கண்ணாடிக்குழா யொன்றினில் இரு நுனிப்பாகங்
களிலும் இரசம் (Mercury) ஊற்றப்படுகின்றது. அந் நுனிகளில் மின்
வாய்கள் (Electrodes) வைக்கப்பட்டு, அவை முறையே மின்சாரத் தோற்
றுவாயுடன் இணைக்கப்படுகின்றன. குழாயைச் சிறிதே சாய்த்து, இரு
பகுதிகளிலுள்ள இரசமும் கலக்குமாறு செய்து, முன்னிருந்தபடியே வைத்
தால், அக் குழாயினுள் மின் வீட்டம் ஏற்பட்டு அது ஒளியுடன் விளங்குகின்
றது. இது இரச மின் வளை விளக்கு. பலதிறப் பொருள்களின் ஆவிகளைக்
கொண்ட குழாய்களில் மின்வீட்ட முண்டாகும்படி செய்வதால் பல நிற
ஒளிகளுடன் திகழும் விளக்குகளைப் பெறலாம்.

இனி, விளக்குகளினின்று ஒளி பெறுதல் என் எனும் வினாவிற்கு விடை
யளிக்க விஞ்ஞானீய வழியைப் பின்பற்றுவோம். பொருள்கள் எல்லாவற்றிற்
கும் மின்னணுக்களே (Eloctrons) அடிப்படையாய் உள்ளன என்பது இக்
காலத்து பூத விஞ்ஞான நூலின் முதற்கொள்கையாம். மின்னணுக்களின் ஆற்
றல் நிலைமைகளின் (Energy States) வேறுபாடுகளே யாவற்றிற்கும் கார
ணம் எனவும் அறிகிறோம். ஆற்றல் நிலையிலேற்படும் வேறுபாடுகளால்,
மின்னியல் அலைகள் வெளி வீசப்படுகின்றன. மின்னியல் அலைகள் வேறு
பட்ட பல நீளங்களுட னுள்ளவை. வானொலி பரப்பும் வழி வெளிப்படும்
நீண்ட அலைகளும், கதிரியத்தினின்று (Radium) வெளிப்படும் மிக நுண்
ணிய காமா கதிர்களின் (Gamma Rays) அலைகளும் மின்னியலான
வையே. குறித்த எல்லைகளுள் அடங்கிய நீளங்களைக் கொண்ட சில அலை
களே கட்புலனுக் கேதுவானவை. ஒரு அங்குலத்தின் நூறாயிரத்தி லொன்
றிற்கும், இரண்டிற்கு மிடையான நீளமுடைய அலைகளே கட்புலனுக்கும்
ஒளி இயல்பினை யுடையவை. காணும் ஒளிபெற இவ்வலைகள் வெளிப்பட
வேண்டும் இதற்கெனவே, விளக்குகளில் இயைபு முறைகளாலோ, சூட்
டாலோ ஆற்றல் நிலை மாற்றங்களை விளைவிக்கிறோம். அவ்வாறு செய்யும்
போது மிக்க ஆற்றல் வீணாகின்றது. ஏனெனில் அவ்வழியில் கட்புலனுக்
குதவாத நீளங்களுள்ள அலைகள் பலவும் எழுகின்றன. காணொளிக்கேற்ற
நீளங்களுடைய அலைகளின் பாற்படும் ஆற்றலை, உண்டாக்கப்படும் முழு
ஆற்றலால் வகுத்தால் பெறும் ஈவை 'பலன் வன்மை' (Efficiency)
என்று குறிப்பிடலாம். எண்ணெய் விளக்குகளில் பலன் வன்மை மிக மிகக்
குறைவு. சுடர்க் கவி விளக்குகளில் அதைவிடச் சற்று அதிகம். மின்
னொளிர் விளக்குகளில் அவ்வீவு சற்றே மிகைப்படுகின்றது. மின் வளை
விளக்கில் அது வளர்கின்றது. மின் ஆவி விளக்கில் பலன் வன்மையின்
உச்சத்தைக் காண்கிறோம். அவ்வுச்ச நிலையில், பலன் வன்மை நூற்றில்
இரண்டிற்கு அதிகமாயில்லை. எனவே, ஒளி யுண்டாக்கும்போது, மக்கள்,
தம் காரியத்திற் குதவாத மிக்க ஆற்றலை இழக்கின்றனர். இவ்வாற்றல்
பயன் தராது வீணாகின்றது. இத்துறையில், இயற்கை, விஞ்ஞானியை
தோற்கடித்துள்ளது. மின்மினிப் புழுவினின்று வெளிப்படும் ஒளியில் கட்
புலனுக்குதவா அலைகளே யில்லை. அவ்வொளியின் பலன் வன்மை முற்றிய
ஒன்றும். பயன்படா சூட்டலைகளற்ற அவ்வொளியை 'தண்ணொளி'

# பண்டைத் தமிழர் நீதிமுறை

("பாபுவாசன்.")

> "பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
> நற்ற வானிலும் னனி சிறந்தனவே." —பாரதியார்.

**ப**ண்டைக் காலத்தில் நடந்த அரசியல் நீதி முறையைப்பற்றி அதிக மாக அறிந்து கொள்ளக்கூடிய வசதிகள் தற்காலத்தில் கிடைக் காமல் போனாலும், சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன் இருந்த தமிழர்களு டைய நீதிமுறையைத் தமிழ் நூல்களும், கல்வெட்டுகளும், செப்பேடுகளும் மிகத் தெளிவாக விளக்குகின்றன.

பழமையான காலத்திலே நம் முதாதையர்கள் மிகவும் சிறந்த நீதி மான்களாகவும், கள்ளம், கபடு, சூது முதலியன அற்ற தூய சிந்தனைகளும், தரும நினைவுகளு முடையவர்களாகவும், லௌகிக விவகாரங்களில் ஜாக் ரதை யுடையவர்களாகவும், சத்திய நெறியினின்றும் சிறிதும் விலகாதவர்க ளாகவும் இருந்தனர். தகாறும், சந்தேகமும் கொடுக்கக்கூடிய சமா சாரங்களில் விட்டுக்கொடுத்து சமாதானம் தேட முற்பட்டார்கள். இவ் வித குணமுள்ள மானிடர்களைப்பற்றி குறுந்தொகை (265) பாட்டில் உணரலாகும்.

> "பண்டுக் தாமறி செம்மை சான்றோர் கண்ட
> கடனறி மாக்கள்."

இந்நாகரீக காலத்திலும் பொய், களவு, வஞ்சகம் முதலியவை எவ்வாறு கூத்தாடுகின்றனவோ, மற்றும் போலீசார்களும், நீதி மன்றத்தார்களும் நடந்தேறியதை, நடப்பதை நடக்கவில்லை யென்றும், நிகழாதவைகளை நிகழ்ந்ததாகவும் எவ்விதம் பொய் சாட்சியங்கள் மூலம் நிரூபிக்கிறார்களோ அவ்வண்ணமே அக்காலத்தும் ஊர்க்காவலதிகாரிகள் கண்டவைகளைக் காணவில்லை யென்றும், பார்க்காததொன்றைப் பார்த்ததாகவும் கூறிப் பொய்சாட்சியமும் குற்றமும் ஏற்படுத்த முயன்றதும் உண்டு. கலித்தொகை யுடையார் இவைகளைப் பாடல் (81-ல்)

> "ஏதப்பாடெண்ணிப் புரிசை வீயலுள்ளோர்
> கள்வரைக் காணாது கண்டோமென்பார் போல."

எனக் கூறியுள்ளார்.

ஆராய்ச்சியாளர்கள் எவ்வளவுதான் தங்களது ஆராய்ச்சிச் சாமர்த்தி யத்தினால் எந்தக் காலத்தும் எந்த நாட்டிலும் சத்தியம்தான் நிலைத்திருக்

---

யெனக் குறிப்பிடலாம். மின்மினிப் புழு தன்னுள் ஏற்படும் இயைபியல் மாறுதல்களால் அவ்வொளியை யுண்டாக்குகின்றது என்று மட்டுமே விஞ் ஞானிகள் கண்டுள்ளனர். அவ்வியைபு மாற்றங்களின் இரகசியத்தை இன் னும் அவர் கற்கவில்லை. தண்ணொளியைச் சொற்ப செலவிலேயே விளை விக்க விஞ்ஞானிகள் அறிந்த பின்னரே, விளக்கின் சரிதை நிருவாறு முற் றுப் பெறும். அதன் பின்னும் தொடரலாம். யாரறிவார்?

தது என நிரூபிக்க இயலாது. மாத மும்மாரி பெய்துவந்த கற்புக்கண்ணகி வாழ்ந்த காலத்து வஞ்சனை செய்த பொற்கொல்லன் வாழ்ந்தது ஒரு சாட்சி யன்றோ!

ஆகையினால் காலப் போக்குகளை ஒத்திட்டுப் பார்ப்பின் அவ்வாதி காலத்திலும் இப் புவியிலுள்ள எந்த நாட்டினரையும், எம் மதத்தினரையும் விட நம்நாட்டில் தமிழ் மக்களிடையே சத்தியத்துக்கும் உண்மைக்கும் கௌரவமும் மதிப்பும் அதிகம் வைக்கப் பட்டது என்பதை நாம் உறுதி யாகக் கூறலாம்.

"உள்ளத்தின் உண்மையொளி யுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண்டாகும்."

என்றபடியும் வாழ்ந்து வந்தனர்.

வியாபாரம்தான் பொய், களவு, வஞ்சகம் முதலிய தீச் செயல்களுக் குக் காரணம் என்றிருந்தும் அவைகளில் ஈடுபட்டுப் பொருளீட்ட முற்பட்ட வணிகமக்களே நடுநிலை நின்று, பொய் கூறாது, தாம் கொடுப்பதிலும் அதி கம் கொடாது, பெறுவதிலும் அதிகம் பெறாது சரி விலையாக விற்று வந்தாரெனின் அக்காலத்திலே வாழ்ந்து வந்தவர்கள் எவ்வளவு தூய்மை யுடையவர்கள் என்பதை,

"நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய் மொழிந்து
தமவும் பிறவு மொப்ப நாடிக்
கொள்வதூஉ மிகைக் கொளாது
கொடுப்பதூஉங் குறைபடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்
தொல் கொண்டித் துவன்றிருக்கை." (207-212)

என்று பட்டினப்பாலை வருணிக்கிறது.

இருந்தபோதிலும், எங்கும் சத்தியமேதான் அந்நாட்களில் கோந் தளித்து, ஈசன் தனது மதிக்கத்தகாத வலிமையால் இனிது உண்டாக்கிய இத் தரணியை கொடுநரகமாக்கி நம் ஜீவியத்தைக் கெடுத்துப் பாழாக்கும் அசுத்தமான அழுக்காறுகள் அக் காலத்தில் நிலவி யிருந்தன, அக் காலத் திலும் நகரங்களில் தீயோர் குடிகொண்டிருந்தனர் என்பதை, இடைக் குன்றூர்கிழார்,

"ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும்
புதுவ தன்றிவ் உலகத் தியற்கை."

என்ற பாட்டில் அறிவிக்கிறார்.

மேலும், பண்டைய ராஜ்யங்களாகிய எகிப்து, உரோமாபுரி முதலிய அரசாங்கங்களில் நடந்த துரைத்தனத்தைப் போலவே நமது தமிழ்நாட்டி லும், நியாய விதிகளும், சட்டதிட்டங்களும் தொகுத்து வைக்கப்படவில்லை. யதேச்சையாகவே தன்னிஷ்டப்படி மன்னன் முரசடித்து அறிவித்தவை

யாவும் சட்டமாயின. அரசன் ஆணைதான் சட்டம்; அவனே தான் நியாயத்தை வகுத்தவன்; தண்டிக்கவும் மன்னிக்கவும் வல்லவன்.

அவர்கள் செலுத்திய நீதி ஆட்சி மதுரைக்காஞ்சியில் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது. அது,

"அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகி
..............................
..............................
..............................
நன்றுக் தீதுங் கண்டாய்ந் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்து."

என்பதாகும். அதிகாரிகளால் துன்புறுத்தப்பட்டு முறை வேண்டினோர்க்கும், மிடியினால் குறை வேண்டினோர்க்கும் எளிதில் முன்னின்று அறம் காட்டினோர் அக்கால அரசர்கள். அவர்கள் தாங்களே மாறுவேடம் பூண்டு ஊரைச் சுற்றிப் பார்த்து, மக்களுக்கு வேண்டிய நலன்களை ஆலோசித்து, அவைகளை நிறைவேற்றினர்.

அந்நாட்களிலும் நியாய மன்றங்கள் இருந்தன. அம் மன்றங்களில் நீதிபதி ஒருவித தலைப்பாகையையும், நீண்ட அங்கியையும் அணிந்து தன் ஆசனத்திலமர்ந்து, நியாயமுறைகளைச் சீர்தூக்கி ஆராய்ந்து தீர்ப்புச் சொல்லுவது வழக்கம். மதுரைக்காஞ்சியிலே,

"அவிர்துகின் முடித்து
நன்றுக் தீதுங் கண்டாய்ந் தடக்கி
யன்புமறனு மொழியாது காத்துப்
பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களை." (494-498)

என வருணித்திருக்கிறது.

இவ்விதமாக நியாயங்களும் சட்டங்களும் தொகுக்கப்படாம லிருந்ததால், மாந்தர் மனச்சாட்சியே நன்றுந் தீதும் நியாயா நியாயமும், கண்டறிதற்குக் கரியாக நின்றது. இவை யிவை குற்றங்கள், இவ்விவற்றைச் செய்தல் தகாது, இவை யிவை புரிவார்க்கு இவ்விவ்வித தண்டனை விதிக்கப்படும் எனத் தொகை செய்து, நியாயவரம்பு ஏற்படுத்தப்படவில்லை. என்றாலும் அதிகச் சிரமமில்லாமலும் எந்தவிதச் சிலவும் அதிகப்பட்டுத் தோன்றி நில்லாதவாறு குற்றங்களைத் தடுக்க அவற்றிற்கு ஏற்பட்ட தண்டனைகளும் தெரிந்திருந்தன. உதாரணமாக, களவு செய்வாருக்குக் கொலை தண்டனை விதிக்கப்பட்டு வந்தது. தமிழ்நூல் வல்லார் இளங்கோவடிகள் அருளிச் செய்த செஞ்சொல்வளஞ் சிறந்த சிலப்பதிகாரத்தின் கண், காவலன் அரசியினது காற்சிலம்பைக் கவர்ந்து சென்றான் கோவலன் தான் என்று அவ

னைக் கொணர, உடனே அதிபன் அவனைக் கொன்று விட ஆக்ஞையிட்டான். கற்பிற்சிறந்த கண்ணகி, பிறகு மன்னன் கோயிலடைந்து வழக்குரைத்துக் கடிந்த சமயத்திலும்,

"கள்வனைக் கோறல் கடுங்கோலன்று
வெள்வேற் கொற்றங்காண் !"

என்று தான் மன்னன் அஞ்சாது விடையிறுத்தான்.

வேறொரு சம்பவமும் பின்வரும் குறுந்தொகை செய்யுளில் கூறப்படுகிறது.

"மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை
புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை
பொன் செய்பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண் கொலைபுரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீஇயரோ வன்னை"

மறுபடியும் இப்பேர்ப்பட்ட குற்றங்களே தலை யெடுக்கா வண்ணம் வேரறுக்க, இக் கொடுமையான தண்டனைகளும், இலஞ்சம் வாங்க முற்படாத மன்னனும் இன்றியமையாதவையன்றோ ?

திரும்பித் தருவதாகப் பொருள்களையும் கடனையும் பெற்றுத் திரும்பித் தரவேண்டிய கடமையும் இருந்து வந்தது. அவ்விதம் கொடுக்க வேண்டிய கடனைத் திருப்பித்தர மாட்டாதவர்களுடைய பொருள்களைப் பிடித்து விலை பேசி வட்டிக்காகவும், முதலுக்காகவும் வரவு வைத்துக்கொள்வது கடவடிக்கையில் இருந்தது. இதைக் கலித்தொகை யுடையார் ?

"கண்டபொழுதே கடவரைப் போலநீ
பண்டம் வினாய படிற்றாற் றொடீஇயதிற்
கொண்ட தெவனல்லா யான்"

என்று நமக் கறிவிக்கிறார்.

உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் அதற்கு பின்வருமாறு உரை கூறிச் செல்கின்றார்.

"தனிசு கடவாரிடத்துக் கொடுத்தவர்கள் அவரவர்களுக்குள்ள பண்டங்களை உசாவுமாறு போல நீயும் என்னிடத்திலுள்ள பண்டங்களை இவைகள் யாவை என்று கேட்ட வஞ்சனையினாலே எனது வட்டியைப் பிடித்ததற்கு, எடா ! நின்னிடத்திலிருந்து யாங்கள் பெற்றுக்கொண்ட பொருள் எப் பொருள் ? என்றான்."

இவ்வனமாக நமது திராவிட சமூகத்திய நீதி முறையும் நியாய முறையும் விசாலித்ததாகவும், ஊர்ஜிதமாக இல்லாமற் போயினும், அக்காலத்திய நீதிபதிகளும், மன்னர்களும் மிக்கவும் நியாயா நியாய வரம்புகளுக் குள்ளடங்

யெவர்களாகவும் இருந்தனர் என்பதை நிரூபிக்கப் போதுமான சான்றுகள் தமிழ் இலக்கியத்திலே மலிந்து கிடக்கின்றன. பொன்னும் நாலுவிதப் படைகளும் கொடுப்பதாகக் கூறியும் மனஞ்சலிக்காது தன் நெறி நின்று தண்டம் இறுவிய மன்னன் நன்னன் கதையை யறிவோம் நாம். தான் இளைஞன் என்றதிலே தன்னிடம் நீதியினின்றும் நழுவுதல் கூடும் என்று பயந்தனர் குடிமக்கள் சிலர் என்று செவியுற்று தான் மாறு வேடம் பூண்டு நரை முடித்து விவகாரம் கேட்டு தம் முது மக்கள் அகமகிழ முடிவு கண்ட சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பற்றி,

> "இளமை நாணி முதுமை யெய்தி
> உரைமுடிவு காட்டிய உரவோன்"

என மணிமேகலையும்,

> "உரை முடிவுகாணான் இளமை யோன் என்ற
> நரைமுதுமக்கள் உவப்ப—நரைமுடித்து
> சொல்லால் முறை செய்தான் சோழன்"

என பழமொழியும் வியந்து பாடுகின்றன.

எதாவது ஒரு வழக்கில் முடிவு கண்ட பிறகும், நாம் பார்த்ததுதான் உண்மை, கொண்டதே முடிவு, அது தான் சட்டம் என்றவின் பிடிவாதம் காணப்பட வில்லை. அரசர் கூட தன் தவறுதலை அறிந்து தம்மாலியன்றவரை நீதி செய்து தம் தப்பிதத்தைப் பாகுபடுத்த முயற்சித்தனர் என்றும், அவ்விதம் இயலாதபோது பெரிதும் பச்சாத்தாபமுற்று வருந்தினர் என்றதையும், கண்ணகி கதையில் அறியாதிழைத்த அபராதத்தின் பயனாக உயிரை மாய்த்துக்கொண்ட மதுரையம்பதியின் முடிவால் நாம் நன்கறிகிறோம். தான் காற்சிலம்பிற் பதித்திருந்தவை வைர மணிகள் என்று கூறித் தன் மற்றக் காலினின்று நூபுரத்தைக் கழற்றிக் காட்டிச் சோதிக்கச் செய்த பொழுது அதிபன் என்ன செய்தான்? நான் செய்தது செய்து விட்டேன்; இனிமேல் என் செய்வது? என விடை பகர்ந்தனனோ? அல்லது நான் அறியாது செய்து விட்டேன்; அம்மனீ! என்னை மன்னிப்பாயாக! என்று வஞ்சகத்துடன் பதிலளித்து நின்றானோ? இல்லை. பின்:

> "மணிகண்டு............"
>
> தாழ்ந்த குடையான் தளர்ந்த செங்கோலன்
> பொன் செய்கொல்லன் றன்சொற் கேட்ட
> யானோ அரசன்? யானே கள்வன்!
> மன்பதை காக்குந்தென்புலங் காவல்
> என்முதற் பிழைத்தது! கெடுகவென் னாயுளென
> மன்னவன் மயங்கி வீழ்ந்தனனே! (சிலப்பதிகாரம்.)

மனு நீதிச் சோழன், மைந்தன் கன்றின் மீது தேரை ஏற்றின தால் கன்று இறந்தது. மன்னன் குற்றஞ் செய்ததும் தன் மகன்தானே என்றும் பகுத்தறிவில்லாத பசுவுக்கு என்ன நியாயம் தெரியும்? என்றும்

வானா இருந்தனனே? இல்லை. நியாயம் தான் பெரியது என்று தானே ரதத்தின் மீதில் சென்று அத் தேரின் சகடத்தின் கீழ் எங்கு கன்று இறந்து கிடந்ததோ அங்கேயே தன் மகனைப் படுக்கச் செய்து அவன் மீது ஏற்றினன்.

பின்னும் குலசேகரன் என்ற பாண்டிய நாட்டு மன்னன் ஒரு நாளிரவு ஒரு அந்தணனின் வீட்டின் கதவைத் தட்டிய குற்றத்திற்காக, தன் குடிகள் சொன்ன நியாயப்படி தன் வலது கரத்தை வெட்டிக் கொண்டான். இதனுல் பிரஜைகளின் தீர்ப்புப் பிரகாரம் வழக்குகள் விசாரிக்கப்பட்டன என்று அறியலாம்.

இக் காலத்தில் போல சட்டங்களும், சட்ட முறைகளும், சாத்திரங்களும் தொகை பெற்றேருத அப் பண்டைய நாட்களிலே, இவ்விதமாக மக்களிடையே பலவந்தமாகப் புகட்டப்பட்டு வந்த நீதிகளை நமக் கு அறிவிக்கும் பொருட்டுச் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள சில அடிகளை இங்கு மேற்கோளாகக் கூறி முடிக்கிறேன். இந் நீதிப் பாக்கள்தான் அக்கால தரும சாத்திரத் தொகுதிகளாகப் பாவிக்கப்பட்டன.

"தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்
பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்,
தெய்வர்தெளிமின், தெளிந்தோர்ப் பேணுமின்,
பொய்யுரை யஞ்சுமின், புறஞ்சொற் போற்றுமின்,
ஊனூண் றுறமின், உயிர்க்கொலை நீங்குமின்,
தானஞ் செய்மின், தவம்பல தாங்குமின்,
செய்ந்நன்றி கொல்லன்மின்றி தீநட் பிகழ்மின்,
பொய்க்கரி போகன்மின், பொருண்மொழி நீங்கன்மின்,
அறவோ ரவைக்களம் அகலா தணுகுமின்,
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்,
பிறர்மனை யஞ்சுமின், பிழையுயி ரோம்புமின்,
அறமனை காமின், அல்லவை கடிமின்,
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினிலொழிமின்,
இளமையுஞ் செல்வமும் யாக்கை நிலையா,
உள்நாள் வரையா தொல்லுவ தொழியாது,
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்,
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென."

மானிட சமூகம் இதுநாள் வரை வளர்ந்து ஓங்கி நின்றதற்கு இவ்வறவுரைகள் தான் ஆதிபீடம்.

---

# சோவியத் பிரசாரத் தலைவர் லொஸோவ்ஸ்கி

(‘நியூஸ் கிரானிகள்’ நிருபர்-பிலிப் ஜார்டன் எழுதியது.)

பள்ளி ஆசிரியரொருவருடைய மகன் தெருக்கோடியிலே நெருப்புப் பெட்டியும் எலுமிச்சம்பழமும் விற்றுக்கொண்டிருக்கிறானென்றால் அண்டை அயலிலுள்ளவர்கள் பிரமித்துப் போவார்கள். ஆனால் 55 வருஷத்துக்கு முன்னே ரஷ்யாவில் ஜார் மன்னர் ஆட்சி செலுத்திவந்த காலத்தில், பெயர் தெரியாத கிராமமொன்றில் தெருக் கோடியை யாராவது கவனித்திருந்தால் அத்தகைய காட்சியைக் காணாதிருந்திருக்க முடியாது. ஆனால், அதைப்பற்றி யாரும் வாய் திறக்கவே யில்லை.

இப்படி ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத இரண்டு சாமான்களை விற்றுக்கொண்டிருந்த அந்தக் குட்டி வியாபாரிக்கு அப்போது வயது எட்டு. அவன் பெயரை யாராவது அப்போது கேட்டிருந்தால் “ஸாலமன் ஆப்ரமோ விஷ்ட்ரிட்ஸோ” என்று பதில் வந்திருக்கும்.

அந்தச் சின்னஞ் சிறு பையன்தான் இன்று 63 வயது ஆசாமியாய், கண்ணியமும் கவர்ச்சியும் மிக்க கனவானாய் விளங்குகிறான். இப்போது அந்தக் கனவானின் பெயரைக் கேட்டால “ஸாலமன் ஆப்ரமோ விஷ்லொஸோஸ்கி” என்று பதில் வருகிறது.

ரஷ்யாவை ஆட்சி புரியும் ஆசாமிகளை விட்டுவிட்டு மற்ற சோவியத் பிரமுகர்களை எடுத்துக்கொண்டால், அவர்களில் யாருடைய பெயருமே வெளிநாடுகளில் இந்தப் பெயரைப்போல் அவ்வளவு தெரிந்திராது எனலாம். லொஸோஸ்கி அயல்நாட்டு விவகாரங்களைக் கவனிக்கும் ஸோவியத் உதவிக் கமிஸ்ஸார்கள் மூவரில் ஒருவராக மட்டுமன்றி, ஸோவியத் செய்தி ஸ்தாபனத்தின் தலைவராகவு மிருக்கிறார்.

## பொய் பேசாப் பிரசாரகர்

பிரசாரத் தலைவர் பதவி வகிப்பதனாலேயே இவரும் கேப்பல்ஸைப் போலத்தான் என்று எண்ணிவிடக்கூடாது. கேப்பல்ஸ் அண்டப் புளுகு அளப்பதில் நிபுணர். இவரோ பொய்யே பேசி அறியாதவர்.

சோவியத் சர்க்காரின் பேச்சாளராகவும் ஸ்டாலினுடைய அயல்நாட்டுக் கொள்கையை எடுத்துக் கூறுபவராகவும் லொஸோஸ்கி திடீரென்று உலகப் பிரசித்தி பெற்றுவிட்டதனால் அவரைப்பற்றி எல்லாரும் கவனிக்க ஆரம்பித்துவிட்டனர். உண்மையில் ஜெர்மனி ரஷ்யாவைத் தாக்கும் வரையிலே தொழிற் சங்க வட்டாரங்களில் தவிர, மற்றப்படி யாரும் இவர் பெயரையே கேட்டிருக்க மாட்டார்கள்.

லொஸோஸ்கி கசாப்புக் கடைப் பையனாகவும் கருமானிடம் கற்றுக் குட்டியாகவுந்தான் வாழ்க்கை ஆரம்பித்தார். ஆனால் அதற்குரிய முரட்டு வழக்கங்களை அவரிடம் இப்போது காணவேமுடியாது. இப்போது மிக

மிக நாஸூக்காக இருக்கிறார். அவருடைய கைவிரல்கள் வெள்ளை வெளுக்கச் சுத்தமாயிருக்கும். [எதிரிகளுக்குத் தைக்கும்படிப் பேசுகையில் இந்த விரல்களால்தான் குத்திக் காட்டுவார்.] உடையை எடுத்துக்கொண்டால் அயல்நாட்டாருட்பட சோவியத் நாட்டிலேயே அவ்வளவு நன்றாய் உடை தரித்தவரை நான் கண்டதில்லை என்பேன். ஆனால் அவர் கண்ணியமாய் இருப்பாரே யொழிய, படாடோபம் அவரிடம் கிடையாது.

விளிம்பில்லாத மூக்குக்கண்ணாடியை அவர் எடுப்பதையும் போடுவதையும் பார்த்தால் ஏதோ மந்திரவாதி மந்திரக்கோல் சுழற்றுவதுபோ லிருக்கும். சில சமயங்களில்—முக்கியமாக ஏதாவது குறும்பாய்ச் சொல்லி விட்டு—தம் யுக்தி பலித்ததா என்று அந்தக் கண்ணாடிக்கு மேலே சந்து வழியாய் உற்றுப் பார்ப்பார். அத்தகைய சமயங்களில் அவர் லேசாகச் சிரிப்பது வயதான மாது ஒருத்தி சிரிப்பதுபோல் இருக்கும். மற்றவர்களோடு கலந்தாலோசிக்கும்போது எதிரில் ஒரு 'லெமனேட்' புட்டி இருந்து கொண்டே யிருக்கும். அதிலிருந்து பிய்த்தெடுக்கும் லேபெல் காகிதங்கள் அவர் கையில் என்னென்ன விதமாகவெல்லாம் மடிபடுமென்று சொல்ல முடியாது.

லொஸோஸ்கிக்கு 21 வயதாயிருக்கும்போது, ராணுவ சேவைக்காக அவர் காஸானுக்கு அனுப்பப்பட்டார். சோல்ஜர்களுடன் படை வீட்டில் வசித்தபோதுதான் அவர் சமதர்ம ஜனநாயகத்துவத்தைப் பற்றி, அதாவது எதனைப் பின்னால் லெனின் ஒரு உயர்ந்த புரட்சித் தத்துவமாக்கினாரோ அதனை, முதல் முதலில் படிக்க ஆரம்பித்தார்.

இரண்டு வருஷங் கழித்து, சமதர்ம ஜனநாயகக் கட்சியின் பெரும்பான்மைப் பிரிவினரான 'போல்ஷெவிக்கு'களுடன் 'ட்ரிட்லோ' [அப்போது அவருக்கு அப்படித்தானே பெயர்] சேர்ந்துகொண்டார். அப்போது அவர் காஸான் கமிட்டியில் ஒரு அங்கத்தினராக்கப்பட்டார். ஆனால் அவர் காஸானில் வெகு காலமிருக்கவில்லை. சீக்கிரமே லொலோவாயா என்னுமிடத்துக்குச் சென்றார். [அதிலிருந்துதான் அவர் தமது புரட்சிகரமான பெயரை வைத்துக்கொண்டார்] அங்கே பாடஞ் சொல்லிக் கொடுத்து ஜீவிக்க ஆரம்பித்தார்.

## தொழிலாளர் பரிச்சியம்

தொழிற் சங்க அமைப்பு பற்றி அவர் தெரிந்துகொண்டதும் இந்த இடத்தில்தான். சீக்கிரத்திலேயே தொழிலாளர்களைப் பல கோஷ்டிகளாகச் சேர்த்து, அவர்களுடைய தேவைகள், கோரிக்கைகள், அபிலாஷைகளை யெல்லாம் நன்கு ஆராய்ந்தறிந்துகொண்டார். இதனால் 1903-ல் ஜாரிஸ்ட் அதிகாரியால் கைது செய்யப்பட்டார். ஆனால் அவருக்குக் கிடைத்த மிகவும் கடினமான தண்டனை காஸானுக்கு அனுப்பப்பட்டது தான்.

இன்னும் இரண்டு வருஷம் கழித்து அவர் டாம்மர் பார்ஸ் மகாநாட்டுக்குச் சென்றார். இந்த மகாநாடுதான் 12 வருஷத்துக்குப் பிறகு மனித வர்க்கத்தின் சரித்திரத்தையே மாற்றிவிட்டது.

ரஷ்யாவுக்குத் திரும்பி வந்தவுடனே அவரை மீண்டும் கைது செய்தார்கள். சிறிது காலம் சிறையிலிருந்த பின் அவர் அங்கிருந்து தப்பி வெளியேறிவிட்டார். ஆனால் பிறகு பிடிபட்டு இர்குட்ஸ்க் என்னுமிடத்துக்கு நாடு கடத்தப்பட்டார். அப்படியும் இந்த ஆசாமியை ஜாரிஸ்ட் போலீஸாரால் பிடித்து வைக்க முடியவில்லை. சீக்கிரமே அவர் பிரான்சுக்கு ஓடிப்போய் அங்கே புரட்சிப் பத்திரிகைகள் நடத்திக்கொண்டு கூடவே தொழிற் சங்க வேலைகளையும் கவனிக்கலானார்.

சிறிது காலம் இப்படி அயல்நாட்டில் காலங் கழித்தபின் 1917-ல் தமது நாட்டுக்குத் திரும்பி வந்தார். அதன் பிறகு சுமார் கால் நூற்றாண்டு காலம் அந்த நாட்டுக்குத் தம் சேவையை அர்ப்பணம் செய்திருக்கிறார். ஆனால், இப்படித் தாய்நாடு திரும்பியதிலேற்பட்ட சந்தோஷத்துக்கும் பங்க மேற்பட்டது. ஏனெனில், அக்டோபர் புரட்சியின்போது பொதுவுடைமைக் கட்சியினரால் ஒத்துப் போகாததாலும் தொழிற் சங்கங்கள் விஷயத்தில் அவர்கள் கையாண்ட முறைகளெல்லாம் தவறானவை என்று கருதியதாலும் உடனே அவர்கள் இவரை அக்கட்சியினின்றும் தள்ளிவிட்டார்கள். ஆயினும் தொழிற் சங்க இயக்கம்பற்றி அவருக்கேற்பட்டிருந்த அனுபவம் அவர்களுக்கு இன்றியமையாததா யிருந்ததால், கடைசியில் அவர் மிகவும் சக்திவாய்ந்த ரயில்வே தொழிலாளர் சங்கத்தின் காரியதரிசியாக்கப்பட்டார். அதன் பிறகு அவர் மீண்டும் கட்சியில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். அதுமுதல் அவர் எப்போதுமே தம் கருத்தை அஞ்சாது வெளியிட்டு வந்திருந்துங்கூட பொதுவுடைமைக் கட்சிக்கும் அவருக்கும் நல்ல உறவுதான் இருந்து வருகிறது. பிற்பாடு அவர் பிராபின்டர்ன் என்னும் சர்வதேசத் தொழிற் சங்க இயக்கத்தின் பிரதம நிர்வாகிகளில் ஒருவரானார். இந்த யுத்தம் மட்டும் ஆரம்பித்திராவிட்டால், இந்தப் பெரிய ஸ்தாபனத்தை அபிவிருத்தி செய்வதிலேயே அவர் காலங் கழித்திருப்பாரென்று தெரிகிறது.

## சோவியத்தின் வாக்கு

ஆனால், வேறு விதத்திலும் இவருக்குப் புகழ் கிடைக்க வேண்டுமென்று விதித்திருந்தது போலும். இப்போது, சின்னஞ் சிறு தொப்பிக்குள்ளிருந்து ஒரு மந்திரவாதி முயல் குட்டிகளை இழுத்துப் போடுவது போலத் தம்முடைய சிவப்புத் தோல் பெட்டியிலிருந்து அவர் ஜெர்மன் ரகசிய தஸ்தாவேஜுகளை எடுத்துப் போடுகிறார் ஆகவே, உலகமே அவரை வேறுவிதமாய் நோக்க ஆரம்பித்துவிட்டது. உலகத்தைப் பொறுத்தவரையில் அவர்தான் சோவியத்தின் வாக்கு. அவர் மூலமாகத்தான் சோவியத் மக்களும் சோவியத் சைன்ய வீரர்களும் உலகெங்கணுமுள்ள தங்கள் நண்பர்களோடும் எதிரிகளோடும் பேசுகிறார்கள்.

---

# உறக்கம் கொள்ளுமா? (ஜி. அழகிரிசாமி.)



"லலிதா, உடம்பை உழட்டாமல் தூங்கம்மா" என்று சுருண்டிருந்த போர்வையை எடுத்து லலிதையின் உடம்பில் போர்த்தினார் கனகசபாபதி ஐயர். அது, அவளுடைய ஜுர வேகத்தை மட்டுப்படுத்த அவர் செய்த அற்ப சாந்தி. ஆனால், உள்ளேயிருந்து குளிர் ஊற்று குபு குபுவெனப் புறப்பட்டு அவளுடைய தேக வெளியில் பாய்வதை அந்தப் போர்வை தடுக்கமுடியுமா? எங்களால்தான் என்ன செய்யமுடியும்?

"அம்மா, அதோ, அந்த.....ஹூஉம் ஹூஉம், அந்த மரத்திலே...... அதோ..." இப்படியாகத் தன் இறந்துபோன தாயாரை நினைத்துப் புலம்பினாள் போலும்!

இதற்குக் கொஞ்ச நேரங் கழித்து, "அம்மா—ஹூஉம்...ராமு... ராமுவோட அப்பா...அப்பா எங்கே...ஹூஉம்" என்று என்னைப்பற்றி ஏதோ நடுக்கத்தினிடையே புலம்பினாள்.

அவள் போர்த்தியிருந்த போர்வை படபடவென்றடித்துக் கொண்டது. அவளுடைய நோயின் கொடுமையை இடைவிடாது அறிவித்துக் கொண்டிருந்தது அந்த அசைவு. அவளது ஈனக்குரல் அவள் படும் வேதனையை வெளிப்படுத்தியது. ஓய்வு ஒழிச்சலின்றி ஓடும் யந்திரத்திலிருந்து ஏகதேசமாய் வெளிப்படும் ஒன்றோடொன்று உராயும் ஒலியைப் போன்று லலிதையின் வாயிலிருந்து ஈனமான குரலில் புலப்பம் கேட்கும்.

"தெய்வமே, எனக்கு அளித்த பிக்ஷையைக் கடைசிவரை நீதான் காப்பாத்திக் கொடுக்க வேணும்" என்று பரிவு மிகுந்த குரலில் கடவுளை வேண்டிவிட்டுக் கனகசபாபதி ஐயர் சமையலறைக்குள் சென்றுவிட்டார்.

"லலிதா! நின் செவ்விய பவழ வாயால், கொஞ்சிய மதுரமான மழலைக்கும், அழிவு வந்துவிட்டதா? "பிள்ளைக் கனியமுதே" என்று நீ பாடிய பாட்டின் இனிமையை இனி அனுபவிக்க எனக்கு அதிர்ஷ்டம் இடந்தருமா?" என்று பலவாறு நினைத்து நைந்தேன். மறுபடியும்,

"ராமு...அப்பா..." என்றாள். "லலிதா, என்னை யாரென்று தெரியல்லே? இதோ வந்துவிட்டேன், கொஞ்சம் கண்ணைத் திறந்து பார்" என்று கெஞ்சும் குரலில் சொன்னேன்.

அவளுடைய குளிர் ஜுரத்தின் நடுக்கம் அதிகரித்து விட்டது.

"மணி நாலரை ஆய்விட்டதே, கொஞ்சம் பக்ஷணம் சாப்பிட்டுக் கொள்றதுதானே" என்று சமையலறைக்குச் சென்று திரும்பிய என் மாமா கனகசபாபதி ஐயர் சொன்னார். அது என் மனவருத்தத்திற்குப் பயந்த உபசாரம். அப்பொழுது உபசாரம், பேயைவிட பயங்கரமாக தோன்றியது. உபசாரம்! மூன்று மாதமாய்த் தீராத குளிர் காய்ச்சலும் இருமலும்; வயிற்றில் ஏழு மாத கர்ப்பத்தையும் சுமந்துகொண்டிருக்கிறாள் லலிதை. அவள் ஒவ்வொரு தடவை இருமும்போதும் அவளுடைய விலா எலும்புகள் தோலைக் கிழித்து விடுவனபோலத் தள்ளிக்கொண்டு தெரியும். ஒவ்வொரு தடவையும், அவள் இருமும்போது எமன் தன் பயங்கர சக்தியை அவள்மீது விட்டுவிட்டுப் பிரயோகிப்பதுபோலிருக்கும். இதில் உபசாரம் வேறு!

"கொஞ்சம் சுழிக்கட்டுமே" என்று வெறுப்போடு என் மாமாவுக்குப் பதில் கூறினேன்.

காலம் தவறி ஏதாவது "ஒழுங்கு"க்கு மாறாக நடந்தால் மாப்பிள்ளையின் மனம் வருத்தப்படும் என்று என் மாமா யந்திரம் மாதிரி—தன் குழந்தையின் நோய்க் கொடுமையை தன்னைக் கட்டாயப்படுத்தி மறக்கச் செய்து கொண்டு, ஓடியாடும்போது, உலகத்தில் நான் எடுத்த ஜென்மத்தின் துன்பஞ் செய்யும் சுபாவத்தினுடைய பிரதிபலிப்பைத்தான் பார்த்தேன்.

* * * *

என் மாமனார் கனகசபாபதி ஐயரின் மூத்த மனைவி வயிற்றில் பிறந்த பெண்தான், என் மனைவி லலிதை. அவள் தன் குழந்தைப் பருவத்திலேயே தாயை இழந்துவிட்டாள். அவள் தகப்பனார் மறுமணம் செய்துகொண்டார். அன்று லலிதையின் வாழ்க்கையில் ஆரம்பித்த கெட்ட காலம், அவள் என்னை மணந்து மூன்று வருஷங்களாகியும் நீங்கின பாடில்லை. இந்தப் பரந்த உலகத்தில் அவளுக்கு நான் கணவனாக வாய்த்ததே அவளுக்குப் பெருங் கஷ்டம்போலும்! எனக்கும், காலமெல்லாம் கவலை, வாழ்க்கையில் அருவருப்பு, கலக்கம்! என் கடமையில் நான் பிசகினதில்லை. அவளும் கடமையைச் செய்தாள். இரண்டு பேருக்கும் நடுவில் துரதிர்ஷ்டம் ஊசலாடிக் கொண்டிருந்தால்...?

இரண்டு குழந்தைகளைப் பெற்று அவற்றை இழந்துவிட்டாள். இப்பொழுதும் வயிற்றில் ஏழு மாதம். ஒரு வருஷமாக அவளுக்கு இருமல்; இப்பொழுது ஜுரம் வேறு. துரும்பாய் இளைத்துவிட்டாள். என் வீட்டில் ஒத்தாசைக்கு ஆளில்லாததால் அவளைப் பிறந்தகத்திற் கனுப்பினேன்.

சென்னையில் எனக்கு ஒரு கம்பெனியில் குமாஸ்தா வேலை. மாதம் நாற்பத்தைந்து ரூபாய் சம்பளம். மனித அறிவை மழுக்கி, யந்திரத் தன்மையைக் கொடுத்து ஆட்டுவிக்கும் சுபாவம் குமாஸ்தா உத்தியோகத்தின் பரம்பரைக் குணம். இந்த லக்ஷணத்தில், நான் குடும்பத்தை நடத்தி வருகையில் உண்டான சீர்கேடுதான் லலிதைக்குத் தீரா நோயைத் தேடிக் கொடுத்தது. அந்த உத்தியோகம் கிடைத்த புதிதில் எனக்கிருந்த இயற்கையான மனுஷத் தன்மை அடிமை வெள்ளத்தில் கொஞ்சம் கொஞ்சமாய்க் கரைந்துவிட்டது. நானோ எனக்கு மேலுள்ள அதிகாரியின் கைப்பாவை.

இப்பொழுது எனக்கும் பத்துநாள் லீவ் கிடைத்தது தெய்வச்செயல்!

மறுநாள் காலையில் ஸ்நானத்தை முடித்துவிட்டுக் கோவிலுக்குச் சென்றேன். என்றுமில்லாதவாறு அன்று கடவுள் சந்நிதியில் என் குறைகளைக் கூறி ஓலமிட்டுவிட்டேன்! என் வாழ்க்கையின் சாந்திக்குத் தவஞ் செய்தது என் முறையீடு. கோவிலிலிருந்து திரும்பும்போது பாதி வழியிலேயே என்னைத் தேடிக்கொண்டு ஆள் வந்துவிட்டான். அவனுடைய உள்ளம், அது சுமந்துவந்த துக்கச் செய்தியை என் மனத்தில் இடந் தேடித் தள்ளிவிட்டது. அப்பொழுது உண்டான புண்ணின் வடு என்று மறையும்?

"லலிதைக்குக் கடுமையாக இருக்கிறது" என்று திக்கிக்கொண்டே பொய் சொன்னான் வந்தவன்.

"அவள் இறந்துவிட்டாள்" என்ற உண்மையைத்தான் தன் கிழிந்த சரீரத்தால் அவனுடைய பொய் மறைத்து வைத்தது.

வீட்டுக்கு வந்து பார்த்தேன். லலிதையின் சவத்தைச் சுற்றியும் பெண்களின் கூட்டம். அவள்மீது புரண்டு புரண்டு கத்தினார் கனகசபாபதி ஐயர். அவருடைய இளைய மனைவி, லலிதையின் தலையைத் தன் மடிமீது வைத்துப் புலம்பிக் கொண்டிருந்தாள். அவள் நீடித்த நாளாய் லலிதைக்குச் செய்ய நினைத்துக் கொண்டிருந்த உபசாரம் அதுதான் போலிருக்கிறது!

லலிதை! உன் பிணக்கோலத்தில் இதழ்கள் புன்சிரிப்பைத் தாங்கியிருப்பது பொருத்தமாயில்லை. திருமண ஊர்வலத்தில் என் காதலுள்ளத்தைக் குத்திய உன் கடைக்கண்களின் கூர்மையும் ஒளியும் மழுங்கியும்விட்டன. இந்த வரண்ட உலகத்தில் நானும் ஒரு பொடி மணல்தானே! அதை அடித்துக்கொண்டு போகச் சக்தியற்ற புயல்தானா உன் உள்ள வெளியில் வீசி என்னை ஆட்டுவிக்கிறது? என் அன்புக் கனியை, எனக்கென்றே பழுத்துக் கனிந்த கனியை, அக்னிதேவனும் சுவைத்து சாரமற்ற சாம்பலாய் ஊதிவிடுவானே! என் வாழ்க்கையைச் சோபிக்கச் செய்யவிருந்த விளக்கு அணைந்துவிட்டதே! நான் கனவு கண்டு, நம்பிக்கையோடு எதிர்பார்த்த வாழ்க்கையின் இசையைப் பாடத் தொடங்குமுன்பே, எனக்கு ஒத்தாசையாயிருந்த வீணையின் தந்தி அறுந்துவிட்டது.

அது நடந்து ஒன்றரை வருஷமாய்விட்டது. எனக்குக் குமாஸ்தா உத்தியோகம் போய் அதே கம்பெனியில் வசூல் ஏஜெண்டு வேலை கிடைத்தது. மதுரையில் என் ஜாகையை அமர்த்திக்கொண்டு வேலை செய்து கொண்டிருந்தேன். எங்கள் திருமணக் கேளிக்கைகளுக்கும், உல்லாசத்திற்கும் ஒருகாலத்தில், நிலைக்களனாயிருந்தது இந்த மதுரைதான். என் மனைவியின் ஊருக்குக் காட்டுப் பாதை வழியாக வாடகை வண்டியில்தான் போகமுடியும். மதுரைக்கும் அதற்கும் ஆறு மைல் இருக்கும். இப்பொழுது அங்கே போக எனக்கு வன் ஆசை உண்டாகப் போகிறது? என் மாமாவும் தன் மகளைப் பின் தொடர்ந்துவிட்டார். நிலங்களையெல்லாம் குத்தகைக்கு விட்டுவிட்டு அவருடைய இளைய மனைவி, தன் சொந்த ஊரில் இருப்பதாகக் கேள்வி. இருந்தாலும் என் வேலையின் நிமித்தம் நான் அந்தக் கிராமத்துக்குப் போக நேர்ந்தது. அங்குள்ள ஒரு வியாபாரி எங்கள் கம்பெனியின் வாடிக்கைக்காரர். அவரிடம் பாக்கிப் பணத்தை வசூலிக்கப் போனேன்.

இரவு நெருங்கிக்கொண்டேயிருந்தது. இருளைப் பன்மடங்கு எடுத்துக் காட்டியது மழைமேகம். "பளீர் பளீர்" என்று மின்னும் மின்னல்தான் அந்தக் கிராமத் தெருவில் என்னைத் தடுமாற்றமின்றி நடக்கச் செய்தது. மழை வெகு சீக்கிரம் பெய்துவிடும் என்று எண்ணிக்கொண்டே செல்லுகையில், நான் தேடிப்போன வியாபாரி எதிர்பட்டார். மழை கொட்ட ஆரம்பித்துவிட்டது. இருவரும் ஒருவரையொருவர் நன்றாகப் பார்த்துக்கொண்டோம். உடனே அவருடைய வீட்டை நோக்கி ஓடினோம். என்ன? அவர் குடியிருந்த வீடுதான் என் மாமாவுடையது. எங்கள் வாழ்க்கையின் பல இன்ப-சோக நாடகங்களைக் கண்டதும் அந்த வீடுதான். அந்த வீட்டில் முன்னால் மாட்டியிருந்த படங்களைக் காணோம். எப்படியிருக்கமுடியும்? இப்பொழுது முன்னைவிட அதிகமாக அலங்கரிக்கப்பட்டிருந்தாலும் அவ்வீட்டைப் பார்த்தால் சுமங்கிலி விதவையாக மாறிய மாதிரித்தான் இருந்தது. அன்றிரவு கட்டிலில் புரண்டு படுத்துக்கொண்டிருந்த எனக்கு உறக்கம் கொள்ளுமா?



# வறுமைச் சித்திரம்

(K. V. சிவசுப்பிரமணியன். B. A.,)

**பா**ரத நாடு பெற்றெடுத்த பழந்தமிழ் வள்ளல்களில் தலையாய தண்ணளியும் கொடைத்திறமும் உடையோன் குமணன். பொன்னும், புவியும், அணியும், ஆடையும், தேரும், களிறும் உணவும் பிறவும் நல்கி மாநிலஞ் சுருங்க நீடிசை நிறீஇய கடைவள்ளல்கள் இவனுடனேயே எழுவராவர். அவர்கள் பாற்சென்று பாடி பரிசில்கள் பெற்ற புலவர் பலர். அங்ஙனம் பரிசில் வேண்டி குமணனிடம் சென்றவர்களுள் பெருஞ் சித்திரனார் என்பாரும் ஒருவர். நாமகளுறையும் புலவர்களிடம் பூமகள் பொருந்துவது பெரும்பாலும் அருமையன்றோ? எனவே, நமது பெருஞ் சித்திரனாரும் வறுமைப்பிணிக்கோர் நிலைக்களனாய் விளங்கினர் என்பது கூறாமலே அமையும்.

புலவர் வீட்டில் போதிய உணவின்றி தானும், மனைவியும் குழந்தைகளும் பட்டினியுடன் படுத்துறங்கிய நாட்கள் பல. அவற்றுள் ஒருநாள் தனது பச்சிளங் குழவியின் பசிக்கு பாலூட்டுவதற்குக்கூட பயனற்ற மார்பினையுடையளாய் தனது மனைவி மருகுகின்று மனம் மாழ்குவதைக் கண்டார் பெரும்புலவர். உடனே அவரது மனம் பெருஞ் சிந்தனையிலாழ்ந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் அவரது மனம் குன்றாது கொடுக்கும் குமண வள்ளலை நாடியது. குருடன் கண் பார்வை பெற்றாங்கு புலவரது உவகை அளவிறந்தது. உடனே குமணனது நாட்டை நோக்கிப் புறப்பட்டார் பெருஞ் சித்திரனார். காடும் மலையும் ஆறும் ஊரும் கடந்து முதிரமலைச் சாரலையடைந்து அங்கு மிளிரும் இயற்கையன்னையின் எழில் மிகு திருவிளை டால்களைக் கண்டு மகிழ்ந்து குமண வள்ளலின் கோயில் வாயிலைக் குறுகினார். அவ் வள்ளலின் அரண்மனையின் கண் அடிவைத்த மாத்திரத்தே உடன் வந்த வறுமைப் பேய் ஓடி விட்டதாக எண்ணினார். வாயிற்காவலர் வழி காட்ட வான்புகழ் வள்ளல் குமண மன்னனது அவைக்களத்தை யடைந்தார் புலவர் பெருந்தகை. கவி மன்னனைக் கண்ட புவி மன்னனும் வருகவென்றழைத்து இருக்கை நல்கினன். புலவர் அரசர் பெருமானை வணங்கி, "குமண! வானுற வோங்கி வளம்பெற வளர்ந்த மூங்கிலின் உச்சிக்கண்ணே இருந்த ஆண் குரங்கானது, அருகிலிருக்கும் பலாமரத்தில் தேனினுமினிய சுவையினையுடைய பலாப்பழத்தைக் கண்டு அதை யுண்ணும் விருப்பினால் தனது பேடையாகிய மந்தியைக் கையாற் குறி செய்தழைக்கும் வளனமைந்த முதிரமலைத் தலைவா! நினது வேல் பகைவர் போர்க்களத்தின் கண் வென்று புகழ் பெறுவதாக. கற்களை யுருட்டி யோடும் கானாறுகளையும் முந்நூறு ஊர்களையும் உடைய பரம்புநாட்டு வேந்தனாகிய பாரியும் கொல்லி மலையையாண்ட வலிய வில்லை யுடைய ஓரியும் மாரிபோல் வரையாது வழங்கும் வள்ளன்மையுடைய காரியும், குதிரைமலைத் தலைவனாகிய

எழினியதியமானும், விண்ணளாவி மேகங்களாற் சூழப்பட்ட பெரிய மலை நாடனாகிய பேகனும், புலவர் பலரின் புகழுரை கொண்ட வள்ளல் ஆயும் தன்னை நினைந்து வருவாரது வறுமையை வேரோடு நீக்கத் தவறாது கொடுக்கும் நள்ளியும் ஆகிய வள்ளல்கள் இறந்துபட்டனர். அது கண்டு புலவர்கள் ஏங்கிய காலை, இரந்தோரது செல்லல் களைய இம் மல்லன்மா ஞாலத்து நீ நிலை பெற்றனை. அதனால் யான் நின்பால் பரிசில் பெற நினைந்து வந்தேன். எனது மனைவியோ வயது முதிர்ந்தவள். உணவின்மையால் தனது கால்கள் பலங்குன்றி கையில் ஊன்றுகோலொன்று கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடக்கின்றனள். வெள்ளிக் கம்பி போலும் வெளிறிய மயிரினள். தனது சாங்காலத்தை எதிர்நோக்கி நிற்கும் பெற்றியள். மாசடைந்த கண் பார்வையினள். அவளும் நானும் ஒத்த அன்போடு இல்லறம் நடத்திவந்த காலை எமக்குப் பிறந்த மக்கள் பல. பச்சிளங் குழவியானது பசியின் மிகுதியால் பாலுண்ணும் வேட்கையோடு பிசைந்து மெல்லும் உலர்ந்த மார்பினள். பசியின் கொடுமையால் குப்பையின் கண் முளைத்துள்ள கீரைகளின் இளந்தளிரைக் கொய்து அவற்றை அடுப்பிலிட்டு உப்பின்றி வேக வைத்துத் தின்று குழந்தைகளுக்கும் கொடுக்கும் அழுக்கோடு கூடிய கிழிந்த உடையினை யுடையவள். என்னிடத்து எள்ளளவும் குறையாத அன்பினை யுடையவள். அவளும் எனது சுற்றமும் பசியினாலும் வறுமைப் பிணியாலும் வாடி வதங்குகின்றனர். அவர்களது செல்லல் களைவான் கருதி நின்பால் வந்தனன். கோடை வெயிலின் கொடுமையால் செடி கொடிகள் வாடி வதங்கிக் கரிந்து போம் நிலையில் இடி மின்னலுடன் இடையீடின்றிப் பெய்யும் மாரியின் மாண்பினை யுடையாய்! நின்பால் பரிசில் வேண்டி வந்த எனக்கு நீ முகங்கோணி உள்ளன்பிலாது கொடுப்பையாயின், அப் பரிசில் விலை மதித்தற்கரிய மதயானையாயிருப்பினும் யான் கொள்ளேன். எமதிருவர் நெஞ்சமும், ஒக்கலுமுவப்ப நீ மனமுவந்து கொடுப்பதாயின் அது குன்றிமணியினளவுள்ள பரிசிலாயிருப்பினும் பெருமகிழ்வுடன் ஏற்றுக் கொள்ளுவேன். மாசிலா வண்மையால் ஆசில் சீர்த்திகொண்ட அண்ணலே! யாம் உவக்குமாறு நீ அருளுவாயாக,' என்று கூறி முடித்தார்.

இங்ஙனம் வறுமையின் தன்மையை விளக்கிக் கூறிய புலவரது சொற்சித்திரம் புறநானூற்றின் 158, 159-வது பாடல்களில் பொதிந்து கிடக்கின்றன. இப் பாடல்களில் கூறப்பட் டிருக்கும் இயற்கை வருணனையும், கடையெழு வள்ளல்களின் கொடைத்திறமும், வறுமைச்சித்திரமும், பழந்தமிழ்ப் புலவரது பெருமிதமும் மிக அழகாகப் பொருந்தி படிப்போருள்ளத்தில் நன்கு பதியும் தன்மை வாய்ந்தவை. வள்ளல்கள் எழுவரின் பெருமையைக் கூறும் முதற் பாடலை நாம் படிக்கும்போது,

"வானம் வாய்த்த வளமலைக் காவஅர்
கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய
வருந்திற லணங்கி னாவியர் பெருமகன்
பெருங்கட னாடன் பேகனும்...............
...................................................

ஏழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோ
ளெழுவர் பூண்ட வீகைச் செந்நுகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க
வொருதான் றாங்கிய வுரனுடை நோன்றாள்"

என்ற சிறு பாணாற்றுப்படை யடிகள் (அடி 84 முதல் 122 வரை) நமது நினைவிற்கு வருகின்றன. அவ் வடிகளிலும் இஃதேபோன்று வள்ளல்களின் வள்ளன்மை வனப்புற விளக்கப்பட்டிருக்கின்றது. தானும் தன் மனைவியும் குழந்தைகளும் உண வின்மையால் வாடி யுலர்ந்து உயிரை யிழக்கும் நிலையாகிய அவ்வளவு வறுமையிலும் பெருஞ்சித்திரனார் அரசன் மனங்கோணி உள்ளன்பின்றித் தரும் பரிசிலை ஏற்க விரும்பினாரல்லர். என்னே புலவர்களின் பெருமிதம்!

"மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து"

என்ற பொய்யா மொழிக்கு இலக்காக, உள்ளன்போடு உள்ளதைக் கொடுப்பின் அதுவே ஈகைத் திறமென்பதையும், மனங்கோணிக் கொடுப்பது மத யானையாயினும் அது வேண்டற் பாற்றன் றென்பதையும் சுருங்கக் கூறி விளங்க வைத்திருக்கின்றார் பெருஞ் சித்திரனார். வறுமைப் பிணி வாட்டிய காலத்தும் புலவரது இல்லாள் தன் கணவர் மாட்டு கொண்டிருந்த அன்பு நினைத்துணையும் குறைந்தாளல்லள். அவ் வம்மையார்,

"தற்காத்து தற்கொண்டாற் பேணித்தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்ற குறளின் இலக்கணத்திற்கு உதாரணமாய் விளங்கினள் என்பதை புலவர் தமது பாடலில் குறிப்பாகக் கூறியுள்ளார். பெருஞ்சித்திரனாரின் சொற் சித்திரத்தின் அழகு தான் என்னே ?



# வயிறு வளர்த்தல்

(கார்த்திகேயன்.)

அன்புமிக்க கோமளா!

சென்ற கடிதத்திலே தம் வயிறு வளர்ப்பதற்காக மக்கள் நடாத்தும் சில நியவாழ்க்கை முறைகளைக் கூறினேன். இதுபோது வேறு சிலரது தொழில் முறைகளை வரையத் தொடங்குகிறேன்.

இவர்கள் நடத்தும் தொழில்கள் மற்றையோர்க்குத் தீங்கையோ, அபாயத்தையோ விளைப்பனவாகா; ஆனால் கண்ணியமும், செல்வாக்கும் அற்றவை. பிறர் கேவலமாக மதிக்கத்தக்கவை. நம்மைப்போல மனிதர்களாகப் பிறந்தும் இவர்கள் இப்படித் தங்கள் வயிற்றுப் பாட்டிற்கு உழல வேண்டியிருக்கிறதே என்று நினைக்கும்போது யாருக்குத்தான் மனம் இளகாது? வீட்டினுள் அடைந்து கிடக்கும் உனக்கு இவர்கள் வாழ்க்கையும் தெரிந்திருக்கவேண்டும் என்பது என் எண்ணம்.

எப்போதாவது நீ நகரங்களுக்குச் சென்றால் பார்க்கலாம். எத்தனையோ கூலிகள் தலையில் தட்டுக்கூடைகளுடன் இங்கும் அங்குமாக அலைந்த வண்ணமிருப்பர். கடைகளில் சாமான் வாங்கும் பெரிய மனிதர்களை இவர்கள் தூரத்தே கவனித்ததே அருகிலோடி வந்து "கூலி வேணுங்களா?" என்பர். இவர்கள் அந்தத் தட்டுக்கூடைகளில் ஏராளமான பண்டங்களைச் சுமந்துகொண்டு மைல் கணக்காகச் சென்று கிடைக்கும் ஓரு, இரண்டு சில்லறைகளைக்கொண்டு தங்கள் வயிற்றுப்பாட்டைப் பார்த்துக் கொள்வதோடு தங்கள் குடும்பங்களையும் காப்பாற்ற வேண்டியவர்களாகின்றனர்!

இன்னொரு வகையாரது வாழ்க்கையைப் பார்! இவர்களுக்குப் பெரும்பாலும் ஹோட்டலில்தான் ஜீவனம். இவர்கள் ஹோட்டல்களைச் சேர்ந்தவர்களல்ல என்பது மட்டும் நிச்சயம். ஏனெனில் இவர்களுக்கு அந்த ஹோட்டல்களில் சம்பளமோ கூலியோ எதுவுமில்லை. ஆனால் இவர்கள் மட்டும் அங்குள்ள முதலாளிகள் தயவை எதிர்நோக்கி நிற்பர். ஹோட்டல்களில் எத்தனையோ செல்வர்கள், சீமான்கள் உணவு கொள்ள வருவதுண்டல்லவா? அவர்களில் பலர் அந்தச் சோற்று விடுதிகளிலேயுள்ள அறைகளை வாடகைக்கமர்த்திக்கொண்டு இரண்டொரு தினங்கள் தங்கியிருப்பதுமுண்டு. அவர்களுக்கு நீராட வெந்நீர் போடுதல், எண்ணெய் தேய்த்து நீராட்டுவித்தல், ஆடைகளைத் துவைத்துலர்த்தல் முதலான பணிகளைச் செய்து அவர்கள் அளிக்கும் கூலிக்கு இவர்கள் கையேந்தி நிற்பர். இப்படிக் கிடைக்கும் ஊதியத்தைக்கொண்டே இவர்கள் காலந்தள்ளி வருகின்றனர்!

இதோ வேறொரு பிரிவினரைப் பார்! இவர்கள் ஜீவனம் அநேகமாக பெரிய தலங்களிலுள்ள ரயில்வே ஸ்டேஷன்களில் ஆரம்பமாகலாம். யாத்திரை வாசிகளிடம் நெருங்கிப்பேசி, அவர்களுடைய சுக துக்கங்களில் தாங்கள் மிகுதியும் அனுதாபப் பட்டவர்கள்போல் காட்டிக்கொண்டு அவர்களை ஆலயங்களுக்கு அழைத்துச் செல்வர். அவர்களுக்குப் பூஜைக்கு வேண்டிய தேங்காய்ப்பழம் முதலியன வாங்கித் தரவோ, அதுபோன்ற குற்றேவல்களைச் செய்யவோ இவர்கள் பின்னடைவதில்லை. இவர்கள் அந்த

யாத்திரை வாசிகளைத் தமக்குப் பழக்கமான அர்ச்சகரிடத்திலேதான் கொண்டுபோய் விடுவர். இதனால் அந்த அர்ச்சகரிடத்திலும் இவர்களுக்கு ஏதேனும் வரும்படியிருக்கக்கூடும். எல்லாம் முடிந்து பிரயாணிகள் புறப்படும்போது இத் தரகர்கள் ஏதேனும் சன்மானம் பெற கைநீட்டத் தயங்கார். இவ்வாறேதான் இவர்கள் வயிறு வளர்த்துத் திரிகின்றனர்!

பிறிதொரு வகையார் பெரும்பான்மையும் சிறுவர்களாவர். இவர்கள் அனேகமாக 15 வயதுக்குட்பட்ட பாலியர்களாகவே யிருப்பர். நகர வீதிகளில் இவர்களைக் கூட்டங் கூட்டமாகக் காணலாம். இவர்கள் கரங்களில் பெரிய விளம்பர அட்டைகள் காணப்படும். இவர்களில் ஒருவன் "மக்களுக்கு மணந்தரும் சோப்பு" என்பான். உடனே மற்றவர்கள் "மன்னார் சோப்பு" என்று உரக்கக் கூச்சலிடுவார்கள். மறுபடியும் அவன் "சுகந்தரும் சோப்பு-என்ன சோப்பு?" என்பான். மற்றவர்கள் "மன்னார் சோப்பு" என்பார்கள். இப்படியே அவன் அந்த சோப்பின் பெருமையைச் சொல்ல ஏனையோர் "மன்னார் சோப்பு, மன்னார் சோப்பு!" என்று ஓலமிடுவர்.

கோமளா! இச் சிறுவர்கள் இப்படி சோப்புக்கு மட்டுமல்ல, இன்னும் பல பொருள்களுக்கும் விளம்பர அட்டைகள் ஏந்திக் கூவிக்கொண்டு செல்வர். இதற்காக சிறிது துட்டு இவர்களுக்குக் கிடைக்கிறது. அந்தச் சிறு தொகையைக் கண்டு இவர்கள் யாது செய்வர்? மற்றையோரைப்போல நல்லுணவுகொள்ள வழியின்றி அகப்பட்ட பண்டங்களை உணவாகக் கொண்டு வாழ்கின்றனர். இதனால் இளமையிலே இவர்கள் பல தீய உணவு வகைகளிலும் பழகித் தங்கள் உடல்நலத்தைக் கெடுத்துக் கொள்ளுகின்றனர்!

இன்னுமொரு வகுப்பார் உண்டு. இவர்கள் மேற்கொள்ளும் செயல் நன்றானாலும், பயன் கருதிச் செய்வதால் பாழாகி விடுகிறது. கோவில் கட்டுவதற்கு நன்கொடை என்றும், தண்ணீர்ப்பந்தல் அமைப்பதற்குத் தருமம் என்றும், சமாராதனை செய்வதற்கு சன்மானம் என்றும் பலர் உன் கணவரைத் தேடி வர நீ பார்த்திருக்கலாம். இவர்களிற் சில பத்திரிகைகள் கூட தயார் செய்து வைத்துக்கொள்ளுகின்றனர். இப்படி இவர்கள் சேகரிக்கும் பொருளிலே இவர்கள் வயிற்றுப் பாட்டுக்கும் பங்குண்டு என்றால் நீ வியப்புற மாட்டாய். பொதுக்காரியத்திற்காக பாடுபடும் இவர்கள் தங்கள் உணவுக்கு என்ன செய்வார்கள் என்று நீ கேட்கலாம். அவர்கள் சிரமத்திற்காக ஏதேனும் சொற்ப அளவில் அந்தப் பொதுநிதியிலிருந்து பயனடைவதை யாரும் மறுக்க மாட்டார்கள். ஆனால் அந்தப் பொது திரவியத்தையே தம்முடைய வாழ்க்கைக்கு அவர்கள் நம்பியிருக்கின்றனர் என்றால் நீ ஆச்சர்யப் படுவாயா, மாட்டாயா? தங்கள் ஜீவிய லட்சியத்தையே பிரதானமாகக் கருதி இத்தவிதமான பொதுக்காரியங்களில் ஈடுபடும் இத் தொண்டர்களை என்னென்பது?

நல்லது. கோமளா! மக்கள் வாழ்க்கைத் துறையில் இன்னும் பல மாதிரிகள் உண்டு. ஆனால் அவற்றை யெல்லாம் வரைய இடமும், நேரமுந்தான் இல்லை.

இப்படிக்கு உன் அன்புள்ள

சிவகாமி.

# கவிஞர் கண்ட கழைக் கூத்தாட்டம்

[கனி]

மூன்று நூற்றாண்டுகளுக்குமுன் தமிழ்நாட்டில் பிரசித்தி பெற்றிருந்த ஆட்டங்களுள் கழைக் கூத்தாட்டம் ஒன்று. இவ்வாட்டமாவது ஒரு மூங்கிற் கழையில் பலவித வித்தைகள் செய்வதாம். திருவாரூரில் ஒருநாள் இந்த ஆட்டம் நடைபெற்றது. சுவாமி கோயிலின் முன் ஒரு உயர்ந்த மூங்கிற் கழை நடப்பட்டிருந்தது. அதன் உச்சியில் கட்டப்பட்டிருந்த கயிற்றின் மற்றொரு நுனி கழைக்குச் சிறிது தூரத்தில் அறையப்பட்டிருந்த ஆணியில் இழுத்துக் கட்டப்பட்டிருந்தது. கழைக் கூத்தாடி தன் பரிவாரம் புடைசூழ வந்தான். அவனைச் சுற்றி மக்கள் சூழ்ந்திருந்தனர். ஒரு சிறு பெண்ணைக் கழைக் கூத்தாடி அம்மூங்கிற் கழையில் ஏற்றினான். அவள் எப்படியோ அதன் உச்சியை அடைந்தாள். அங்கு நின்றுகொண்டு தன் உடம்பை வளைத்து வேடிக்கை காட்டினான். அதே சமயத்தில் கழைக் கூத்தாடி ஆணியிற் கட்டப்பட்ட கயிற்றில் ஏறினான். அவன் தலையில் ஒரு குடம் இருந்தது. அவனுடைய ஆட்களில் ஒருவன் மத்தளத்தை எடுத்துத் தட்டினான். மூங்கிலின் உச்சியில பெண்ணின் ஆட்டம்; அதனுடன் சேர்க்கப்பட்டிருந்த கயிற்றுப் பாலத்தில் கழைக் கூத்தாடி கயிற்றைப் பிடியாது மேல்நோக்கி ஏறுவது; கீழே இவர்களை உற்சாகமூட்டக் கொட்டு முழக்கம். இவற்றைக் கண்ட மக்கள் உற்சாகங் கொண்டு கைதட்டிக் குதூகலித்தனர்.

இத்தகைய கழைக் கூத்தாட்டங் கண்ட பலருள் ஒரு கவிஞரும் இருந்தார். அவர் நெல்லை ஜில்லாவைச் சேர்ந்தவர். தாம்பிரபரணிக் கரையில் வாழ்ந்தவர். சிவபக்தர். நல்ல கவிதா விலாசமுடையவர். தமிழ்மொழிப் புலமையுடன், வடமொழி தருக்க பாஷை ஆகியவற்றிலும் வன்மையுடையவர். முருகன் அருளை முற்றும் பெற்றவர். இத்தகைய கவிஞர் கழைக் கூத்தாட்டத்தை நன்கு ரஸித்தார். அவர் கண்ட காட்சி அவர் மனதில் பதிந்துவிட்டது. அன்று மாலை வழக்கம்போல் அவர் தியாகப் பெருமான் கோயிலின் பின்புறத்தேயுள்ள சோலையுட் புகுந்தார். சூரியனின் பொற்கதிர்கள் புகாதது அச்சோலை; கனிதரும் மரங்களும், மலர்தரும் செடி கொடிகளும் நிறைந்தது. கமுகு மரங்கள் பல நிறைந்து நின்றன. அவற்றின் முத்துப்போன்ற பூக்களும், மரகதம் போன்ற காய்களும், பவழம் போன்ற பழங்களும் வனப்பு வாய்ந்து விளங்கின. பலாமரங்களில் பலாப் பழங்கள் அதிகமாக இல்லை. பிஞ்சுகளும் காய்களுமே நிறைந்திருந்தன. இவற்றை எல்லாங் கவனித்துக்கொண்டே கவிஞர் ஓரிடத்தில் அமர்ந்தார். ஒரு கமுகின் உச்சியை அவர் நயனங்கள் பார்த்தன. அங்கு ஒரு ஆண் மயில் அமர்ந்திருந்தது. வானத்தில் செல்லும் கார்மேகத்தைக் கண்ட அது தன் தோகையை விரித்து ஆடியது. கமுகின் அடியை நோக்கினார். அங்கு ஒரு முல்லைக் கொடி தெரிந்தது. அது கமுகைப் பற்றுக்கோடாகக் கொண்டு மேலே சென்றிருந்தது கமுகின் ஓலை ஒன்றைப் பிடித்து அதையும் சுற்றி வளைந்து வளர்ந்து பின்னும் கீழ்நோக்கிப் போய் பக்கலில் இருந்த வாழை மரத்தை எட்டிப் பிடித்து அதையும் சுற்றிக்கொண்டிருந்தது அந்த முல்லைக் கொடி. அது கமுகு மரத்திலிருந்து வாழை மரத்திற்கு ஒரு பாலம் போட்டிருந்ததுபோல் தோன்றிற்று. இதே சமயத்தில்

அங்கே ஒரு குரங்கு வேகமாக ஓடிவந்தது. அது தன் கைகளில் நன்றாய்ப் பழுத்த பலாப்பழம் ஒன்றை வைத்திருந்தது. அதைத் தூக்கிக்கொண்டு பல மந்திகள் பின் வந்தன. ஓடிவந்த குரங்கு ஒரே தாவில் வாழை மரத்தின் உச்சியைப் பிடித்தது. பலாப்பழத்தைத் தலையில் வைத்து ஒரு கையால் பிடித்துக்கொண்டு முல்லைக் கொடியில் ஏறத்தொடங்கிற்று. பின் தொடர்ந்துவந்த மந்திகள் கீழேயே நின்றன. என்ன ரமணீயமான காட்சி! கமுகின் உச்சியில் ஒரு மயில் தோகை விரித்தாடுகிறது. அக்கமுகிலிருந்து வாழையைத் தாவிப் பிடித்திருக்கும் முல்லைக்கொடியில் மந்தி ஏறுகிறது தலையில் பலாப்பழத்துடன். கீழே பல மந்திகள் நின்று கைகொட்டிக் குதிக்கின்றன. இவற்றை எல்லாங் கண்ட கவிஞருக்கு அவர் கண்ட கழைக் கூத்தாட்டம் மறுபடியும் கண்முன் வருகிறது. பெண்ணுக்குப் பதில் மயிலும், கூத்தாடிக்குப் பதில் குரங்கும், மருங்கினர்களுக்குப் பதில் மந்திகளும், மூங்கிற் கழைக்குப் பதில் கமுகும், வடத்திற்குப் பதில் முல்லைக்கொடியும் இருப்பதைக் காண்கிறார். அதை அப்படியே ஒரு பாட்டில் வெளியிடுகிறார் :—

"................தடமலர்ப் பொதும்பரின்
விழுக்குலை தெரிப்ப விட்புலத்தவர்க்குப்
பழுக்காய் தூக்கும் பச்சிளங் கமுகிற்
செடிபடு முல்லைக் கொடிபடர்ந் தேறித்
தலைவிரித் தென்னக் கிளைதொறும் பிணைத்து
மறிந்துகீழ் விழுந்த நறுந்துணர்க் கொடிகள்
..................................
தாற்றிளங் கதலித் தண்டினிற் படரவப்
பைங்குலைக் கமுகிற் படர்சிறை விரித்தொரு
கண்செய் கூந்தல் களிமயி(ல்) நடிப்ப
........................
வானர மொன்று வருக்கைத் தீங்கனி
தானெடுத் தேந்துபு தலைமேற் கொண்டு
மந்திகள் தொடர மருண்டு மற்றந்தப்
பைந்துணர்க் கொடியிற் படர்தரு தோற்றம்
வடஞ்சூழ்ந்து கிடந்த நெடும்பெருங் கம்பத்(து)
அணங்கனை ளொருத்தி ஆடின(ள்) நிற்பப்
பெரும்பணை தாங்கி மருங்கினர் கொட்டக்
குடந்தலைக் கொண்டொரு கூன்கழைக் கூத்தன்
வடந்தனி னடக்கும் வண்ணம தேய்க்கும்
பூம்பணை மருதத் தீம்புனற் கமலை"

(திருவாரூர் நான்மணி மாலை.)





# "குன்மம்" அல்லது குடல் புண்

(காரை-டாக்டர். மோஹறன்·)

அபாயம், "ஸோடா உப்பு" அதி ஜாக்கிரதை. வாழ்க்கையில் விசாலமான நன்மைகள் பல நிகழ வேண்டும். நாம் என்றும் ஆனந்த சாகரத்தில் மூழ்கிக் கிடந்துருள வேண்டும். சகல பாக்கியங்களிலும் நமக்கும் பங்கிருக்க வேண்டும். சுகபோக ஸல்லாபங்களை நுகர்ந்து கொண்டிருக்குங் காலத்தை தடை செய்யக்கூடிய எவ்வித இன்னலும் நமதிந்த நிம்மதியான வாழ்க்கை லீலைக் கோட்டைக்குள் நுழைய நினைக்கக் கூட விட்டுவிடக் கூடாது என்னும் அபார எண்ணங்களையுடைய ஒருவர்; ஒரு சிறிய அதிலும் அந்த சமய சாதகத்தை உத்தேசித்து தெரிந்தும், தெரியாமையினாலும் விஷத்தை வலிய வேண்டி (ஸோடா உப்பு என்னும் ஒரு வகை காரமான வெடிப்புள்ள உப்புத் தூளை) வாயில் கொட்டிக் கொண்டு (இதற்கோர் அளவோ நிறையோ கிடையாது. மனங் கொண்டமட்டில்) தண்ணீர் குடித்து விடுகிறார்கள். அந்தோ! என்ன அநியாயம். எத்தனை பெரிய மடமை. எவ்வளவு கால துன்பத்திற்கு புதைக்கும் அஸ்திவாரம். எகனே, இக் கொடுமையை நினைத்தாலும் குடல் நடுங்குகின்றதே.

குறைவின்றிப் படைத்தாய், நிறைவற்ற செல்வத்தையும் தந்தாய், மக்களின் வித வித லீலா விநோதங்களை மாறி மாறி கண்ணாரக் கண்டு களித்துக் கொண்டிருக்கும் நீ இவ்வாறான நீண்டகால நிலைகத்தானே இழைத்துக் கொள்ளும் மாயா மதியீனத்தை ஏன் தந்தாயோ? உனது பலவித திருவிளையாடல்களில் இதுவும் ஒன்றாகவா இருக்க வேண்டும்?

எனதருமை வாசக நேயர்களே! மனிதனது வாழ்க்கைச் சுழலில் பல சிக்கலான பிரச்சினைகள் நிகழ்ந்து விடுகின்றன. அதிலிருந்து மீளுவதற்கு எவ்வகை வழியுமின்றி தவிக்கும் ஒருவனது அறிவு திடத்திற்கேற்ப குன்றி விடுகிறது. அதனாலவன் தனது சுய நிதானத்தை இழக்கிறான். தூண்டலின்றி உடன் மரணத்திற்கும் துணிந்து விடுகின்றான். ஏதோ ஒருவகை நமன் கை விளையாடல் கருவியில் மோதுண்டு மடிந்தும் விடுகின்றான். நமது பார்வைக்கு அவனது சகலவித துன்பங்களும் ஒரே அடியில் ஒழிந்து விட்டதாக தோன்றி விடுகின்றன. இவை விதிவசமோ, மதியீனமோ, மண்டை எழுத்தோ, ஜன்ம வினையோ நிகழ்ந்து விடுகின்றதென்று வைத்துக் கொள்வோம்.

ஆனால், ஒருவன் தனது வாழ்நாள் முழுவதையும் பாழ் நாட்களாக அமைத்துக்கொண்டு தீராத் துயரடைய துணிந்து விடுவானா? துணிவதெங்ஙனம்? ஒரு க்ஷணமேனும் அவ்வாறிருக்க நினைக்கவும் மாட்டானல்லவா?

இவ்வித உணர்ச்சியின் எல்லையைக் கடந்து சென்று நீடிய ஜன்மத்தின் முடிவு வரையில் சித்திரவதை படுபவனே வயிற்று வலிக்கு

"ஸோடா மாவை" மருந்தாகக் கொண்டவன். இவனை எந்த எழுத்தோடு சேர்ப்பீர்கள்? இவனுடன் பெற்றோர், பெண்டீர், பிள்ளை, சுற்றம், நண்பன் எவ்வாறு காலங் கழிப்பார்கள்? சற்றே யோசியுங்கள்.

### வயிற்று வலி

பொதுவாக வயிற்றுவலி, அதன் ஆந்தரீகத்தை உள்ளாழ்ந்து அலசிப் பார்த்தால் குடலினுட்கருவிகள் தனித் தனியே பல வகை தவறான காரணங்களால் தாக்கப்பட்டு சுய உணர்ச்சியற்று விடுகின்றன. காலடைவில் தாக்குண்ட இடத்திற்கு இதமளிக்கவல்ல சாதகமில்லாமல் போவதனால் அவை தொடர்ந்த துன்பத்தை விளைவிக்குமோர் நோயாக ஆகிவிடுகின்றன. காரணங்கள் சாதாரண அந்தஸ்தை உடையதானாலும் அதனாலேற்படும் தாக்குதல் மிக்க கொடுமையானதும், ஓயா துன்பத்தை தரத்தக்கதுமாகி விடுகின்றன, இடங்கள்:—குடல், குழை, சிறுகுடல், பெருங்குடல், மணிக்குடல், விசிறிக் குடல், கொழுப்புக் குடல், இரைப்பை முதலியன.

முதலாவது உண்ட ஆகாரணம் ஜீரண மாவதற்கு முன் ஆகாரங் கொள்வதும். எவ்வளவு சாப்பிட்டாலும் உடம்பிற்கு நல்லது தானே என்ற நோக்கத்துடன் சரீர ஸ்வபாவத்திற்கு ஏற்கக் கூடியதும், ஏற்றுக் கொள்ளாததுமான வகை வகைப்பட்ட ஆகாரங்களைத் தட்டு தடங்கலின்றி உண்பதும், அடுத்த நேரத்திற்கு கொஞ்சம் மதமதப்பு கண்டாலும் கவனியாது ஆகாரங் கொள்வதும் மூன்றும் வேளைக்கு பெரும் மதமதப்புக் காணுமானால் உடனே ஒழிக்க "ஸோடா வாட்டர்" ஒரு கிளாஸ் உட்கொள்வதும் முன் உண்ட ஆகாரங்கள் ஒன்றிற்குப் பாதியாக உடைபட்டு உள்ளழுத்தப்படும் அறிகுறியாக உள்ளிருந்து எப்பம் வருவதைக்கண்டு எல்லாம் ஸோடாவின் கிரியாவினால் பஸ்மமாகிவிட்ட தென்றெண்ணி அதற்குமேல் விலாப் புடைக்க ஆகாரங்களை அள்ளித் திணித்து உட்சென்றவை அசையக்கூட இடமின்றி குடல்கள் புடைத்து திணறலுண்டாகும் பொழுது தண்டை விரித்துக்கொண்டு படுத்துவிடுவதும் பெரும் பாலோரின் வழக்கமாகி விட்டது.

இவை சில மணி நேரங்களுக்குள் நிகழ்ந்த தவறுதல். ஆனால், இதனால் ஏற்படக்கூடிய நோயோ வெகு நாள் கஷ்டத்தைத் தருவதுடன் உயிருக்கும் ஹானியை விளைவித்து விடுகிறது. அது மாதிரியே இதனாலேற்படும் கெடுதல்களையும் ஒன்றிரண்டு வரிகளிலோ, 3, 4, பக்கங்களிலோ எழுதி முடித்து விடுவதற்கில்லை. பல லக்ஷக் கணக்கான புத்தகங்கள் தேவைப்படலாம். இருப்பினும் "சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்" என்பதற்கேற்ப கூடுமான வரையில் சுருக்கமாக விளக்குகிறோம்.

---

குறிப்பு:—இவ்வரிய நோக்கங்களைத் தாங்கிவரும் நமது குடும்பத் துணை "ஆனந்தபோதினி"யை வாழ்க்கைத் துணையாக்கிக் கொள்வதுடன் நுங்களது நண்பர்களையும் இம்மாதிரியான அபாயங்களை விட்டு விலகி வாழ 'ஆனந்தபோதினி'யை துணையாகச் செய்துகொள்ளும்படி போதிப்பீர்களென்று நம்புகின்றேன். வருடச் சந்தா ரூபாய் 1. ஆனால் 1000 ரூபாய்களின் அநியாய யாத்திரையை தடுக்கவல்ல ஓர் அரிய சஞ்சீவியாகலாம். எடுத்த ஜன்ம மெதற்கோ அதற்கு நிம்மதியாக வாழ்ந்து உழைக்கலாம்.

முன் பக்கத்தில் சொன்ன முதலாவது காரணத்தில் விளையும் தீமைகள்:—1-வது, குடல் ஆகாரத்தை கிரமப்படி அரைத்துக்கொள்ள முடியாமல் திகைத்து விடுகிறது. 2. அதனால் அவை ஒவ்வொரு தடவையிலும் 1000-தடவை அசையும் சக்தியை இழக்கிறது. 3. அங்கு ஆகாரத்துடன் சேர்ந்து அறைப்பட வேண்டிய ஒருவகை இயற்கை புளிப்புச் சத்து அதிகமாக செலவாகும். 4. நாளடைவில் உள்ளதும் முடிந்து சாக்க ஒய்வும் வழியுமின்றி பசை பட்டுவிடும். 5. நெருக்கமாக குடலில் ஆகாரம் அடிக்கடி அழுர்துவதால் குடலினுள்ளுள்ள இயற்கை மஞ்சள் நிறமான பசை கொஞ்சங் கொஞ்சமாக தேய்ந்து ரணமாகி வெண்மையாக மாறிவிடும். 6. குடல் தாங்கக்கூடிய அளவுக்குமேல் கனமாகி விடுவதனால் இதன் அஸ்திவாரக் கருவிகள் தளர்ந்துபோகும். 7. மிகுந்த கனத்தைத் தாங்க இயலாமல் மூலக் கமலம் அடிக்கடி திறந்து மூடிக்கொண்டிருக்கும். 8. இதனால் கடலை நொய்யை குழைத்தாற்றியதைப் போன்ற சூடான இளகிய மலம் வெளியாகிக் கொண்டிருக்கும். 9. நாளடைவில் குடல்கள் அசையக்கூட சக்தியின்றி அயர்ந்துபோகும். 10. இயற்கையாக சுற்றி வரவேண்டிய அளவுக்குமேல் அசைவு தருகிறதனால் ஜீரணமாக்குவதற்கு இயலாமல் அஜீரணமாகி விடுகிறது. 11. குடலில் சுற்றும் ஆகாரம் தயங்கித் தயங்கி நகர்ந்து திடீரென்று விழுவதால் உண்டாகும் சப்தம் அதிகரித்து அடிக்கடி புளியேப்பமாக வெளியாகிறது. வலி, புரட்டல், கட்டியைப்போல் வயிற்றை முட்டல், கர்-புர்-கிர்-குர்றென்ற பலவித சப்தங்களுண்டாகும். உப்பும், விதவிதமான சங்கடங்களைத் தரும். நிம்மதியைக் குலைக்கும், மூச்செடுக்கும், திணறலுண்டாகும், வகை வகையான வலிகள் மாறி மாறி யுண்டாகும். 12. வளர்த்துவானேன் பொதுவாக ஆகாரமுண்பதால் சரீரத்திற்கு கிடைக்கக்கூடிய 3 வகை அரிய ஜீவ சத்துக்களின் நன்மைகளுக்குப் பதிலாக 30 வகை அபாய அறிவிப்புகளை விளைவித்து, 300 வகை கெடுதல்கள் விளைத்து 3000 வகை நோய்களைப் பயிராக்குகின்றன.

(தொடரும்.)

---

## நன்கொடை

நமது ஆனந்தபோதினியின் வளர்ச்சியை முன்னிட்டு, சிலோன், சுளிபுரம் - தொல்புரம் அம்மன் கோயில் ம. க. அம்பலவாண பிள்ளை அவர்கள் ரூ 12 நன்கொடையாக அளித்திருக்கிறார். இவ்விதம் நமது போதினியின் வளர்ச்சியில் ஆர்வங்கொண்டு நன்கொடை வழங்கிய அவருக்கு இறைவன் எல்லா நலன்களும் கொடுத்து மகிழ்விக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

# இளமை நிலையல்ல

(க. சிதம்பரம் பிள்ளை.)

மனிதன் இவ்வுலகத்தில் இன்பமாய் வாழ்ந்து வருவதற்காக கடவுளால் சிருட்டிக்கப்பட்டிருக்கும் பொருள்கள் அனேகம். ஆனால், அவைகளை மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரையில் இன்பமாகவே அனுபவித்து வர முடியுமா ?

உலகப் பொருள்களில் கிடைக்கும் இன்பத்தை மனிதன் இறக்கும் வரையில் ஒன்றுபோல் அனுபவித்து விடலாம் என்றாலோ, அதற்கு அவனுடைய வயது வேறு குறுக்கே நிற்கிறது.

பொதுவாக மனிதனுக்கு ஏற்பட்டிருக்கும் வயது நூறு. ஆனால், இந்த நூறு வயதும் ஒன்றுபோல் இருக்கிறதா ? ஒவ்வொரு வயதிலும்—ஏன் ? ஒவ்வொரு நிமிடத்திலும் மனிதனுடைய உடல் நிலை மாறுபட்டுக் கொண்டே வருகிறது.

இருந்தாலும், மனிதனுடைய பருவ அமைப்பைக் கீழ்வருமாறு ஆன்றோர்கள் வரையறை செய்திருக்கிறார்கள்.

| ஆண் | வயது | பெண் | வயது |
|---|---|---|---|
| பாலன் | 5 | பேதை | 7 |
| மீளி | 10 | பெதும்பை | 11 |
| மறவோன் | 14 | மங்கை | 13 |
| திறலோன் | 15 | மடந்தை | 16 |
| காளை | 16 | அரிவை | 25 |
| விடலை | 30 | தெரிவை | 31 |
| முதியன் | 48 | பேரிளம்பெண் | 40 |

இனி வேறொரு வகையிலும் கூறுவர்.

| | | | |
|---|---|---|---|
| பாலன் | 5 | வாலை | 12 |
| யௌவனம் | 16 | தருணி | 16 |
| குமரன் | 32 | பிரவீடை | 30 |
| வார்த்திகம் | 42 | விருத்தை | 40 |

இதன் மேல் நூறு வயது வரையும் கடைசியாகச் சொல்லப்பட்ட பருவமே.

மனிதனின் பருவங்கள் இத்தனை வகைகளில் நடைபெற்றுக் கொண்டிருப்பதாலும், ஒவ்வொரு பருவத்திலும் அவனுடைய உடல் நிலையும் மனோ நிலையும் வெவ்வேறு விதங்களில் மாறுபட்டுக் கொண்டிருப்பதாலும், மனிதன் இவ்வுலக இன்பத்தை இறக்கும் வரையில் எப்படி ஒன்று போல் அனுபவித்து வர முடியும் ?

பொதுவாகக் கவனிக்குமிடத்து ஆண்கள் 48-ம், பெண்கள் 40-ம் வயதுகள் வரையில் தான் ஒருவாறு உலக இன்பத்தை அனுபவித்து வரத் தக்க காலம் என்று சொல்லாம். ஆனால், அதற்கிடையிலும் வியாதிகள் வேறு காத்துக் கொண்டிருக்கின்றன!

ஒருவனுக்கு 35 வயது சென்று விட்டாலே அவன் இவ்வுலக சுகத்தை வெறுத்து விட்டு, மறு உலகச் செல்வமாகிய பேரின்பத்துக்கு வேண்டிய காரியாதிகளில் கவனம் செலுத்த வேண்டுமென்று ஆன்றோர் கூறுகின்றனர். அப்படிச் செய்பவன் தான் அறிவாளனாம்.

அதிலும் முதுமைப் பருவத்தில் உடலில் போதுமான பலம் இல்லாமல் போவதால் எழுந்து நடக்கவும் தடியை ஆதாரவாகக் கொள்ள வேண்டிய நிலை ஏற்படுமென்று, அதனால் உடல் நிலை சரியாக இருக்கும் இளமைப் பருவத்திலேயே அவ்வுலகச் செல்வத்தை அனுபவிப்பதற்கு வேண்டிய செயல்களில் மனதை ஈடுபடுத்த வேண்டுமெனவும் எண்ணி ஒருவன் அவ் வழியில் செல்வானேயானால் அவனை 'நல்லறிவாளன்' என்று கூறல் வேண்டும்.

"நரைவரும் என்றெண்ணி நல்அறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார்;—புரைதீரா
மன்னா இளமை மகிழ்ந்தாரே, கோல்ஊன்றி
இன்னாங்கு எழுந்திருப் பார்."

[குழவியிடத்தே=இளமைக் காலத்திலேயே, துறந்தார்=இவ்வுலக ஆசையை வெறுத்து விலக்கினவர், புரை=காமம் வெகுளி மயக்கம் ஆகிய குற்றங்கள். மன்னா=நிலையில்லாத, இன்னாங்கு=துன்பத்தோடு]

இனி, உலக இன்பத்தை வாலிபப் பருவத்தில் மிகுதியாக அனுபவித்து வரலாம் என்றாலும் அவ் வின்பத்தின் தன்மை தான் என்ன?

தெய்வங்களுக்கு வழிபாடுசெய்யும் முறையில் ஒரு சிலர் ஆடுகளைப் பலியிடுவது வழக்கம். அப்போது கோயில் பூசாரியானவன் பத்திரங்களையும் பூக்களையும் கொண்டு கட்டப்பட்ட மாலையை ஒரு கையிலும், மற்றொரு கையில் வேலையும் பிடித்துக்கொண்டு ஆவேசத்துடன் வந்து பலிக்களத்தில் நிற்பான். உடனே தன்னை வெட்டப்படும் என்பதை அவ்வாடு அறியாது. தனக்கு ஆகாரங் கொடுக்கத்தான் வந்து நிற்கிறான் என்று எண்ணி, அது அம்மாலையிலுள்ள பத்திரங்களைக் கடித்துத் தின்று மகிழ்ச்சி அடைகிறதாம். அப்படி அது அடைந்த இன்பம் எவ்வளவு நேரம்? அடுத்தபடி அவ் வாட்டுக்கு நேரும் கதி என்ன!

இளமைப் பருவத்தில் அனுபவிக்கும் மனித சுகத்தின் தன்மையும் அவ்வளவினதே.

"வெறிஅயர் வெங்களத்து வேல்மகன் பாணி
முறிஆர் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க,
மறிகுள(கு) உண்டன்ன மன்னா மகிழ்ச்சி
அறிவுடை யாளர்கண் இல்"

[வெறிஅயர்=ஆவேசம் ஆடுகின்ற, வேல்மகன்=பூசாரி, பாணி=கை, முறி=பத்திரம், மறி=ஆடு, குளகு=இலை.]

இதனால் இளமைப் பருவத்தை நம்பி யிருப்பதில் பயனில்லை என்பது தெரிந்து விட்டது. நாம் தற்போது இல்லற நிலையில் இருக்கிறோம். அந்நிலையை நாம் அந் நிலையில் செய்ய வேண்டிய தென்ன?

இல்லறத்தில் இருக்கக் கூடியவர்களாகிய ஒவ்வொருவரும் சற்பாத்திரங்களா யுள்ளவர்களுக்கு தன்னால் இயன்ற தருமங்களைச் செய்துவரக் கடமைப்பட் டிருக்கிறார்கள் என்பதாக தரும சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதுவும் கையில் எப்பொழுது பொருள் இருக்கிறதோ, அப்பொழுதே அதைத் தவணை வைக்காமல் செய்யவேண்டுமாம். ஏன்? செல்வமும் நிலையாய் நிற்கக் கூடியதல்ல, அதனால். *

சரி; தருமம் செய்ய வேண்டியது தான். ஆனால் அதற்கு இப்பொழுது அவசரமென்ன? நாம் இப்போது இளம்பிராயமுள்ளவர்களாகத் தானே இருக்கிறோம். வயது முதிர்ந்த பிற்காலத்தில் அதைச் செய்வோமே.

அப்படியல்ல. நாம் வயது முதிர்ந்து தான் இறப்போம் என்பது நமக்கு எப்படித் தெரியும்? கொடுங்காற்று அடிக்கும்போது மரத்திலுள்ள பழங்கள் மட்டுமல்லாமல், உதிரும்பக்குவ மில்லாத காய்களுங் கூட விழுந்து விடுவதில்லையா? ஆதலால், சமயம் வாய்க்கும்போ தெல்லாம் நல்லறத்தை செய்து வருவதே சாலச்சிறந்ததாகும்.

"மற்றறிவாம் நல்வினை, யாம்இளையம், என்னாது
கைத்(து)உண்டாம் போழ்தே கரவாது அறம்செய்மின்;
முற்றி இருந்த கனிஒழிய, தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு"

[கைத்து=கையில். கரவாது=ஒளிக்காமல, தீவளி=கொடுங்காற்று[

---

* சற்பாத்திரங்கள் யார்? நாம் பாடுபட்டுத் தேடிய திரவியத்தை தருமத்தில் ஏன் செலவிடவேண்டும்? தருமம் செய்வதற்கும் பேரின்பத்துக்கும் சம்பந்தமென்ன! என்பன போன்றவைகளை "மனிதனும் கடமைகளும்" என்னும் நூலில் பரக்கக் காணலாம். கிடைக்குமிடம்; "ஆனந்தபோதினி" ஆபீஸ்.





# தோழமை

(ஏகை சிவஞானம்.)

தோழமை என்பது நட்பு, கேண்மை, தொடர்பு எனப் பல பொருள்படும். அந்நட்பானது ஒருவரோடொருவர் நட்புக் கொள்ளுதற்குப் பழகுதலாகிய காரணங்களால் ஏற்படுகிறது; அன்றியும், அது ஒருவருக்கொருவர் பழகாமலே அவர்மாட்டு எழும் ஒத்த உணர்ச்சியாலும் ஏற்படுகிறது.

உலகில் ஒவ்வொருவரும் நண்பர் இன்றி வாழ்க்கை நடத்துதல் இயலாததாகும் என்பது மிகையாகாது. மேலும், மக்கள் தமது வாழ்க்கையில் தமக்காகத் தேடிச் செய்துகொள்ளும் பொருள்கள் யாவற்றினும், நட்பை விடச் சிறந்தது பிறிதொன்றில்லை என்னலாம்.

மேலோரிடத்துக் காணப்படும் நட்பொழுக்கம் அன்பினால் பிணைக்கப்பெற்றுத் தியாக உணர்ச்சியோடு புறத்தே மிளிர்கின்றன. சிறந்த நட்பொழுக்கத்தையுடைய அறிஞர்கள், அவர்களுள் ஒருவருக்கு இடுக்கண் நேர்ந்த காலையும், நேரும் என்று தோன்றிய விடத்தும் அவருக்காகத் தங்களுடைய உயிரையும் ஈந்து உதவ முன் வருகின்றனர். அத்தகைய சிறந்த குணங்களைக் கொண்டவனும் இராமபிரானிடத்தே தொடர்பு கொண்டவனுமாகிய குகன் என்பானை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

தனது சிற்றன்னையின் ஆணைப்படி சீதையுடனும், தம்பி இலக்குமணனுடனும் வனத்துக்குச் சென்ற இராமபிரானை, வேடர்கோனாகிய குகன் அவரது உயர்ந்த குணங்களை உணர்ந்தவனாய், அவர்பால் நட்புக் கொண்டனன்.

இங்ஙனமாக, பரதன் தன்னுடைய மாமன் இல்லத்தினின்று, புறப்பட்டு அயோத்தியை யடைந்து, நடந்தவற்றை யுணர்ந்து, ஆற்றாத்துயருற்றான். பின் அவன் காடு நீங்கிய இராமபிரானை அழைத்து வந்து, அவரை அரசாளச் செய்ய வேண்டுமென்ற உறுதிகொண்டு, வனம் போந்தனன். அவ்வண்ணம், தன்னுடைய தாய்மாரோடும் சேனை பரிவாரங்களுடனும், கங்கையின் வடகரையே வந்து தோன்றிய பரதனைக் குகன் பார்த்தனன். குகன் இராமபிரானிடத்துக் கொண்டிருந்த அளவு கடந்த காதலாலும், பரதன், அங்கு தோன்றிய குறிப்பை உணராமையாலும், இராமபிரானோடு பொருதற்கே பரதன் படையுடன் வந்திருக்கிறான் என மாறுபட எண்ணினன். உடனே மிக்க கோபங்கொண்டு, பரதனை எதிர்க்க ஏற்பாடுகள் செய்யலானான்.

“இராமபிரான் என்னிடத்து தோழமை கொண்டுள்ளார். ஆகையால், அவரை எதிர்க்கவந்த இப் பரதனையும் இவனது சேனையையும் உயிரோடு போக விடேன். இவன் தனது மூத்தோனாகிய இராமபிரானிடத்துப்

பொருதற்குச் செல்ல வேண்டுமானால், என்னையும், என்னுடைய சேனைகளையும் வீழ்த்திய பின்னாலன்றோ இக் கங்கையைக் கடக்கவேண்டும்! அவ்வனம் செல்லற்கு யான் இவனை விடுவனோ!

"பாவமு(ம்) நின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமும் என்பவை மண்ணுலகு ஆள்பவர் எண்ணாரோ
ஆவது போகஎன் ஆருயிர்த் தோழமை தந்தான்மேல்
போவது சேனையும் ஆருயி ருங்கொடு போயன்றோ."

"மூத்தோனாகிய இராமபிரான் அரசாள்வதைத் தவிர்த்து தாயினால் கைப்பற்றப்பட்ட நாட்டை இப் பரதன், ஆள்வதோடு நில்லாமல் காட்டிலும் அவருக்குத் துன்பம் விளைவிக்கக் கருதிய இச் செய்கையானது, மிகவும் பாவமானது, இதனால் பெரிய பழி யேற்படும் என்பதையும் எண்ணிலன். உலகத்தை யாளுபவர் இவை யாவற்றையும் எண்ண மாட்டார்களோ!" என்று பரதனது தன்மையைக் குறித்து எண்ணலாயினன்.

மேலும்,

"அருந்தவம் என்துணை யாள இவன்புவி யாள்வானோ
மருந்தெனின் அன்றுஉயிர் வண்புகழ் கொண்டுபின் மாயேனோ
பொருந்திய கேண்மை உகந்தவர் தம்மொடு போகாதே
இருந்தது நன்று கழிக்குவென் என்கடன் இன்றோடே."

என்பதால், குகன் தன் இன்னுயிர்த்தோழர் இராமபிரானிடத்துக் கொண்ட உயர்ந்த நட்பின் பெருமை விளங்குகிறது. இராமபிரான் கானகத்துச் சென்ற போழ்து தானும் அவருடன் செல்லாமையைக் குறித்துச் சந்தோஷப்படுகிறான் குகன். அன்றியும் அவ்வாறு தனது நண்பருக்காகச் செய்யப்போகும் அவ்வளவு செய்கையும், தான் நிறைவேற்ற வேண்டிய கடமையென்று கருதுகிறான். அவற்றை நிறைவேற்றுதற்குத் தக்க சந்தர்ப்பம் வாய்த்ததைக் குறித்துச் சந்தோஷிக்கிறான். "என்னுடைய உயிர் கிடைத்தற்கரிய அமிர்த மல்லவே! எனது நண்பருக்காக உதவாத இந்த உயிர் இருந்து என்ன? அவரைக் காக்கும் பொருட்டு போர் புரிந்து இறந்தாலும் அதனால் பெரும்புகழையே அடைவேன்" என்கிறான் குகன்.

என்னே! இவன் இராமபிரானிடத்துக் கொண்ட நட்பு!

சிறந்த நண்பர்கள் தம்முடைய தோழர்களுக்கு நேரிடும், இடுக்கண்களைக் களைவதில் எவ்விதத்திலும் பின் வாங்குதல் கூடாது; அவ்வாறு பின்வாங்குதல் இழுக்கு என்றும், அவ்விழுக்குக்கு ஆளானவனை உலகம் பழிக்கும் என்றும்; அவ்விதப் பழிச் சொற்களுக்குத்தான் ஆளாகுதல் கூடாது என்றும் அஞ்சுகிறான், மாசில் மனத்தினனாகிய புளினர்கோன்.

"அஞ்சன வண்ணன் என்ஆருயிர் நாயகன் ஆளாமே
வஞ்சனை யால்அரசு எய்திய மன்னரும் வந்தாரே
செஞ்சரம் என்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ
உய்ஞ்சுஇவர் போய்விடின் நாய்குகன் என்றெனை ஓதாரோ."

அங்கு வந்த பரதனை "வஞ்சனையால் அரசு எய்திய மன்னர்" என்கிறான் குகன்; தான் இராமன் மேற்கொண்ட நட்பின் தாபத்தால். மூத்தவன் அரசாளும் முறையை உலக வழக்காகக் கைகேயி பெற்ற வரத்தின் பயனாகப் பரதன் அடைந்த நாட்டை 'வஞ்சனையால் எய்திய அரசு' என்று பழிபடக் கூறுகிறான்; அத்தகைய பழிச் சொல்லுக்குத் தானும் ஆளாகலாகாது என்று எண்ணங்கொண்டு, பரதனை எதிர்க்காது விடின் தன்னை உலகம் 'நாய்க் குகன்' என்று ஏசுவார்களே! என அஞ்சுகிறான்.

> "ஆழ நெடுந்திரை யாறு கடந்துஇவர் போவாரோ
> வேழ நெடும் படை கண்டு விலங்கிடும் வில்லாளோ
> தோழ மையென்(று) அவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
> ஏழமை வேடன் இறந்திலன் என்றுஎனை யேசாரோ."

"நம்மிருவருக்கும் தோழமை இருக்கட்டும்" என்று சொல்லிய ஒரு சொல்லுக்காகவாவது நான் அவரைக் காக்கவேண்டாமா? இன்றேல் கேண்மையைக் கொன்று இந்த எளிய தன்மையுடைய வேடன் இறக்காது இன்னும் உயிருடனிருக்கிறான்! என்று என்னைத் தூற்றார்களோ?" என ஆவேசம் வந்தவனைப் போல் ஏதேதோ பேசுகிறான் இராமபிரானது ஒப்பற்றதோழனாகிய குகன்.

* * * *

உயர்ந்த குணங்களை யுடையாரின் நட்பை விளக்க இன்னொரு உதாரணத்தையும் கூறலாம்.

ஔவையாரைத் தமிழுலகு நன்கு அறியும். அவரது நூல்களின் நயங்களையும் அந் நூல்களில் காணும் நீதி முதலியவற்றையும் போற்றிப் புகழாதார் இல்லையென்னலாம். சிறக்க, ஔவையார் பால் நட்பு பூண்டு ஒழுகிய அரசரும், வள்ளல்களும் அக்காலத்தில் அனேகர் இருந்தனர். அவர்களுள் அதிகமான் நெடுமானஞ்சி என்பானாகிய மன்னனும் ஒருவன். ஒருகால் அவ்வரசன் ஔவையாருக்கு ஒரு நெல்லிக்கனியை ஈந்தனன்.

அதைக் குறித்து ஔவையார்,

> "வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்
> களம்படக் கடந்த கழல்தொடித் தடக்கை
> ஆர்கலி நறவின் அதியர் கோமான்
> போர்அடு திருவிற் பொலந்தார் அஞ்சி
> பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
> நீல மணிமிடற்று ஒருவன் போல
> மன்னுக, பெரும! நீயே; தொன்னிலைப்
> பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
> சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது

ஆதல் நின்அகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்கீந் தனையே"

என்ற செய்யுளால் பாராட்டி யிருக்கிறார்.

"அதியர்கோமானே! பெரியமலைகளின் மேல் ஏறி மிகுதியாகக் கஷ்டப்பட்டுக் கொணர்ந்த இந்த நெல்லிக் கனியை, இது பெறுதற்கு எளிதல்ல என்று அறிந்தும், அதைக் கருதாமலும், அதனால் விளையும் நன்மையை எனக்குக் கூறாமலும், சாதல் நீங்க எனக்கு அளித்தனை; இவ்வாறு செய்த நின் செய்கை முன்னாளில், நீலகண்டன் இறவாமைக்குக் காரணமாகிய அமிர்தத்தைத் தேவர்கட்கு ஈந்து, இறப்பதற்குக் காரணமாகிய நஞ்சைத் தான் உண்டு யாதொரு தீங்குமின்றி நிலைபெற்று இருப்பதை யொக்கிறது. ஆகையால் அமுதமயமான நெல்லிக்கனியை எனக்கு ஈந்த நீயும் நிலைபெற்று வாழ்வாயாக" என்று வாழ்த்தினார். என்னே! இவ்விருவர் மாட்டு எழுந்த நட்பு! நட்பின் பயனாய் இவ்விருவர் உள்ளங்களும் அன்பினால் பிணைக்கப்பட்டன. ஆகையால் தான், அதிகமான் தன்னையும் ஔவையாரையும் வெவ்வேறாகக் கருதிலன்.

பிறரிடத்து நட்புக் கொள்வதாயின் முதலிலேயே அவரைப் பற்றி நன்கு ஆராய்தல் அவசியமாகத் தோன்றுகிறது. ஏனெனில், நம்மால் நட்புக் கொள்ளப்பட்டவர் தீயவராயின், அவருக்கு நேரும் பகை தீமை முதலியவைகள் நம்மையும் சார்ந்து அவற்றால் பின்பு வருத்தமடைய நேரிடும்.

"ஆய்ந்தோய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்"

ஆகவே, யாவரிடத்து நட்புக் கொள்வதா யிருப்பினும் முதலில் அவரின் பழக்க வழக்கங்களையும், குணநிசயங்களையும் நன்கு ஆராய்ந்து, ஏற்றவர் என்று தெரிந்த பிறகு நட்புக் கொள்ளுதல் சாலச் சிறந்ததாகும். அவ்வாறு ஆராய்ந்து ஒருவருக்கொருவர் தோழமை கொள்ளுதல் அறிவுடையார் செய்கையாகும். அறிவுடையார் நட்பானது நாளுக்கு நாள் பிறைச் சந்திரன் போல் வளருந் தன்மையுடையது. அவ்வாறு ஆராயாமல் நட்புக் கொள்ளும் கீழ் மக்களது செய்கை, பூர்ணசந்திரன் நாளுக்கு நாள் குறையும் தன்மையை ஒத்ததாகும் என்பதை,

"நிறைநீர் நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர் பேதையர் நட்பு"

என்ற குறள் விளக்குகிறது.

சிலர் தாம் பிறரிடம் நட்புக் கொண்டிருப்பதைப் போல் நடித்துப் பிறகு அவரைப் பின்னால் தூற்றுவதை நாம் பார்க்கிறோம். அன்றியும் சிலர் தமக்கு ஆகவேண்டிய காரிய நிமித்தம் பிறரோடு அளவளாவிப் பழகிப் பின்னர் தமது காரியம் நிறைவேறிய பிறகு அவரைப் பிரிந்து, அவர்க்குத் தீங்கு நினைக்கவும் துணிகின்றனர். அத்தகையோரைக் கொடிய கூற்றுக்குச் சமமாகக் கூறலாம். இதை விளக்க பழமொழியில் வரும் ஒரு செய்யுளைக் கொண்டு உணரலாம்.

"கண்ணுண் மணியே போற் காதலால் நட்டாரும்
என்னுந் துணையிற் பிறராகி நிற்பரால்
எண்ணி யுயிர் கொள்வான்என்று திரியினும்
உண்ணும் துணை காக்கும் கூற்று.

மனித சமூகத்தில் ஒவ்வொருவரும் சிறந்த தோழர் ஒருவரைப் பெறுதல் அவசியமாகிறது. அத்தகைய நண்பர்கள், சமயத்தில் தங்களுக்கிடையில் ஏற்படும் துன்பங்களைக் களைவதற்குத் தக்க யோசனை கூறுவதில் சிறந்த மந்திரிகளை ஒப்பாகின்றனர். சிறந்த நண்பனானவன் ஈருடலும் ஒருயிருமாக எண்ணி, தமது நண்பர்களுக்கு நேரும் சுகதுக்கங்களை உடனிருந்து அனுபவிக்கிறான். ஒருவனுடைய ஆடையானது பலர் முன்னிலையில் அவனை யறியாமல் நெகிழ நேர்ந்த விடத்து அவனது கைகள், அவனுக்கு நேர விருக்கும் அவமானத்தைக் காக்கும்பொருட்டு அவனை யறியாமல் தாமாகவே அவ் வாடையைச் சேர்த்துப் பிடிக்கின்றன. இதுபோல் உயிர்த் தோழர்களுக்குள் நேரும் இடைஞ்சல்களை தம்மையறியாமலே தீர்த்து வைக்கின்றனர். மேலும், நண்பர்கள் செய்ய வேண்டிய கடமையைத் திருவள்ளுவர் எவ்வாறு உணர்த்துகிறார் என்று சற்றே கவனிக்கலாம்.

"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு."

நண்பர்கள் தத்தமக்குள் சிரித்து கேளிக்கையாகக் காலம் போக்குதல் பொருட்டோடு நிற்காமல் அவர்களுக்குள் நேரும் கெடுதியை எடுத்துரைத்தல் வேண்டும். அவ்வாறு நாம் விலக்க எண்ணி எடுத்துரைக்கும் மொழியை அவர் ஏற்றுக் கொள்ளாவிடின், அத்துடன் நில்லாமல், அவ் விடுக்கணை அது நேரும் முன்பாகவே களைதல் வேண்டும் என்பதை மக்கட்கு அறிவுறுத்த இடித்துக் கூறுகின்றார். இதுவே நட்பின் தன்மை. எனவே, நட்பு என்பது மக்கட் சமூகத்துக்கு ஒரு சிறந்த அணிகலன் என்றும், உயர்ந்த குணங்களையுடைய நண்பன் ஒருவனைப் பெறுதல் பெரும் பாக்கியத்தைப் பெறுதலாகும் எனறும் அறிகிறோம். அன்றியும், அந் நட்பு தானும், ஆன்றோரிடத்துத் தலை சிறந்து போற்றற்கரிய முறையில் மிளிர்கின்ற தென்றும், மனம் ஒன்றுபட்ட நண்பர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் அவர்களைத் தொடர்ந்து, அவர்களுக்கிடையே ஓர் ஒப்பற்ற இன்ப வாழ்வை அளித்து உதவுகின்றது என்றும் பெறப்படும்.



# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்



(சி. பி. ஆனந்தம்.)



## புத உலகம்—அதன் இயலும் பலனும்

ஐம்பூத சேர்க்கையின் வடிவாக சிருஷ்டியின் கிரமம் இலங்குகின்றது. அதில் இயற்பெருந் தழற் பிழம்பு சூரியன்; அஃது அது போன்ற எண்ணில் பல் கோடியுள் ஒன்றாகும். அந்த ஒன்றின் ஆதிக்க எல்லையுள் அடங்குவனவே நிலவுலகிற்குப் பலன் நிகழ்த்துவதற்குரியன. அவற்றுள் ஒன்றாக வரும் புதன் என்னும் கிரகம் சூர்யனில் மிக அருகில் இடம் பெற்றுள்ளதென்று முன்னமே சொல்லி யிருக்கிறோம். இது நிலவுலகினுக்கு நிகழ்த்தத்தக்க பலன்களை நிச்சயிப்பதற்கு அதன் இயல்பினைக் கண்டு கொள்ளுதல் முதற் கண் மிகவும் அவசியமாகும்.

இயல்பு என்பது அதில் கலந்துள்ள பூதங்கள் ஐந்தின் சேர்க்கை அளவும்—அவ்விதம் கலந்து ஒரு அண்டமாய்த் துலங்கும் அதன் நிலைபெற்றாக்கும்—இயக்கத்திற்கும் முதற்பெரும் ஆதாரவாயுள்ள சூர்யனின் சம்பந்தமும் கொண்டு தான் கூற வேண்டும். அவ் வழி, புதனில் பிருதிவியின் கூறு நாற்பத்து இரண்டு பங்கும்—ஜலத்தின் கூறு பதினைந்து பங்கும்-நெருப்பின் கூறு பதினான்கு பங்கும்—வாயுவின் கூறு இருபத்து ஒன்று பங்கும் எனக் கண்டிருக்கின்றனர். மண் கூறு பெறும் சூர்ய உஷ்ணம் அதன் தன்மையில் முப்பது சதமானம் நீக் கூறக்கும்—வாயுவின் கூறுக்கும் செல்லும் வகையில் வாயுவின் கூறு மிகுதியாய் விடும். என்றாலும், மண் கூறில் சரிபாதி எப்பொழுதும் சூர்ய ஒளியற்று மிது குளிராக விருக்கு மாதலால், மண் கூறில் பதினைந்து சதமானம் மட்டும் வாயுவின் கூறக்கு வரும். இந்த முறையில் சில வேளை ஐம்பத்து எழு பங்கு வாயுவின் கூறில் உயர்ந்தும்—சில வேளை நாற்பத்து ஒன்பது பங்கிற்குக் குறைந்தும் இருக்கும். இந்த நிலைமை சூர்யனிலிருந்து புதன் இருக்கும் தூரத்தைப் பொறுத்து ஏற்றமும்—தாழ்வும் ஏற்படுகிறது. புதனுக்குத் தன்னைத் தான் சுற்றி வரும் சுழற்சி இல்லை யாகையால், அதனைச் சுற்றி வாயுவின் இயக்கம் (காற்றோட்டம்) இருப்பதற்கில்லை யென்று சொல்லப்படுகிறது. அதனால், அதன் கூறுகள் ஏற்றத் தாழ்வுடன் பாதிக்கப்படக் கூடியதாக விருக்கின்ற தென்கின்றனர். தன்னையே சுற்றிக்கொள்ளும் சுழல் இல்லாமையின், அதன் உஷ்ணப் பக்கம் மிகு உஷ்ணமாகவும்—குளிர்ப்பக்கம் மிகு குளிராகவும் இருந்து வருகின்றன. உஷ்ணமோ—குளிரோ இரண்டும் அதனதன் ஆதிக்கத்தில் தாங்குவதற் கரியதாக விருக்கும். அவற்றின் சமனத்திற்கு ஏதுக்கள் அற்று மிருத்தலால், ஜீவகோடிகள் ஏதும் வாழ்ந்து வருவதற்கில்லை, ஆனால். ஜீவ நிலைக்குரிய உயிர்ச் சத்துகள் மிகுதியாயுள்ளன வென்று

காணத் தக்கதாக இருக்கிறது. உயிர்ச் சத்துக்களில் முன் சத்தும்—பின் சத்தும் சரி சமமாக அமைந்திருத்தலின், உயிர் வர்க்கங்களைத் தோற்றஞ் செய்யவோ—நிலை பெறச் செய்யவோ கூடியதாக வில்லை. இந்த நிலையைத் தான் அலி நிலையென மதிக்கும் நிலம்.

இருளும்-ஒளியும் சம சார்பில் நேர்—எதிர்ப் புறங்களில் எப்போது மிருத்தலின், இருள்—ஒளி கலந்த வண்ணமாய்—அதாவது சியாமள நிற மென்று இதன் வண்ணத்தைக் கூறலாம். ஒளி பரவிய பக்கம் நிலத்தின் காட்சிக்குத் துலங்குகையில் அதன் ஒளி அலை வீச்சின் வண்ணங் கண்டு மரகதத்தின் பச்சை என்றனர்.

புதன் சூர்யனை நடுவாக்கி அதனைச் சுற்றி ஓடும் கதியில், நிலத்திற்கு வடக்காகக் காட்சிக்குத் துலங்குதலின், இதற்கு வடதிசையின் ஆதிக்கத்தைக் கூறினர். உதயகால நக்ஷத்திரமாகத் தோன்றுகையில், சூர்யனுக்கு மேற்பால் அதன் சுற்றுவீதி அமைந்து, அதுவேளை சூர்யனுக்கும் பூமிக்கும் இடையில் சென்று கொண்டிருக்கும். இதுகால், நிலத்தின் அருகு அதிக மாதல், பொருள் எல்லையின் (Material Plane) தொடர்புக் குரியதாக விருக்கும். சூர்யனுக்குக் கீழ்பால் புதன் வருகையில், பூமியிலிருந்து தூரமாய் நிலத்திலும் சூர்யனுக்கு மிக அருகில் செல்லும் பொழுதும் நிலத்தின் நெருங்கி தொடர்பை அதற்கும் நிலத்திற்கும் இடையில் வரும் சூர்யன் பிரித்துவிடும். அதுகாலை, காட்சி எல்லையின் அப்பாலாய உணர்வு எல்லையுள் வரும் வாயுவின் ஆதிக்கம் மிகுந்ததாய் அதன் முக்கிய நிலையமான மனமோகன எல்லையின் (Mental Plane) தொடர்புக்குரிய தாக விருக்கும். இவ் வழி பூமியின் அருகாக சூர்யனுக்கு மேற்பால் புதன் பொருள் எல்லையின் சிறப்புகளுக்கும் தூரத்தே சூர்யனுக்குக் கீழ்பால் உணர்வின் விகாசங்களுக்கும் உரியதாக விருக்கும்.

இவ்விதம் இரண்டுவித அதிகாரங்களுக்குரியதாய்-ஆனால் அவ் இரண்டும் சம அளவினை யுடையதாக—இரண்டு எல்லைகளிலும் உழைப்பு கலனை பெருக்கிச் செல்லும் ஆற்றல் புதனின் இயலாக அமைகின்றதெனத் தெரிகின்றது. இதனால், அதனை கணக்கன்—புலவன்—பண்டிதன் என்றது ஜ்யோதிஷ பல பாகம் (Predictive Side of Astrology) எழுச்சிக்குரிய விருத்திகள் யாவும் கலை நுணுக்கங்களிற் சிறந்து, அவை ஒவ்வொன்றின் சிகரத்து உச்சி மட்டும் சென்று கண்ட பெற்றியை இதற்கு முக்கியமாகக் கற்பிக்கலாம். ஆனால், அதன் பயன் தனக்கெனப் பெரிதும் அமைந்து விடாது பிறர் பொருட்டு ஆகும உழைப்பு மிகுந்ததென்று கொள்ளத்தக்கதாம்.

தன்னைச் சுற்றி வரும் பால் மதிகள் ஏதுமற்ற இந்தப் புதன் நிலவுலகின் காட்சிக்கு உதய—அஸ்தமன எல்லைகளில் அந்தப் பொழுதுகளில் வளர்ச்சியும்—தேய்வுமற்ற கலைகளுடன் மெல்லிய பிறை யென்னத் தோற்றுதலின், அறிவு பெருக்கும் கலை முதலாய்—புத்தியாக ஆட்சிக்குடையதாய் மதிக்கலாம். இந்த மதிப்பில் தான் புத்தி காரகன் என்றனர். காட்சியின் அப்பாலாய உணர்வு எல்லையின் நிகழ்ச்சிகளுக்குக் காட்சி எல்லையில் - தக்க விளக்கங்களாக வரும் ஒலி நிலைக்கும்-அதன் இயல் விளக்கப் பொறிகள்

என்ன வரும் வரிவடிவங்களுக்கும் ஆட்சி முதலாய் இந்தப் புதனைக் கருதலாம். ஏன், மண் முதல் விண் மட்டும் இதன் இயலாக இருப்பது பற்றியாம். இது கொண்டே இதனை வித்தியா காரகன் என்றனர்.

உணர்வு அலைகளின் கோட்டமான (நிலையமான) மன எல்லையின் ஒரு முக்கிய பகுதியே இதன் தீக்ஷண்ய மாதலின், மனமோகன எல்லையின் அதிகாரியான சந்திரனின் வர்க்கமாய்-அவ்வழி அதன் மைந்தன் சசி-மைந்தன் என்பர். இயற்றழற் பிழம்பினிடமிருந்து பெறுகின்ற ஒளி அலைகளை தன்னுள் ஜீரணஞ் செய்து அதன் பலனை அளவிட்டு வெளி விடுதலின், குறிக்கோளும்-அதன் சித்திக்குரிய வழிகளும் பரிசுத்தம் நிறைந்தனவாய் ஒரு முதல் நிலையின் பெரு விகாசத்தின் அளப்பரிய சக்தியே இதன் நிலையமாக விருக்கும்.

அண்ட வானின் எல்லை முதலிய விவரங்களை பிண்ட வானின் எல்லை முதலியவற்றும் கண்டு முன்னோர் இதன் ஆதிக்கத்தையும்-செயலையும் கூறுவது இங்கு பெரிதும் கவனிக்கத்தக்கது. புத்தி பாக ஆட்சி கொண்டதாய் உடற்கூறில் முது கெலும்பு நாடிகளில் நடுவான சுழிமுனை வீதிகளில் வீணை தண்டின் ஊடு செல்லும் சுழிமுனையும்-உள் அங்கங்களில் பித்தாசயம் குடற் பகுதியின் உள் ஆளுகையும் இதற்குக் கூறுவர்.

இத்தகைய புதக் கிரகத்திற்கு ஜ்யோதிஷ பலபாகம் வகுத்து வைத்திருக்கும் விவரம் கீழே தருகிறோம்.

சசி-புத்திரன் என்னும் புதக் கிரகம் சூரியனுக்கு மிக அருகில் வாயுவின் கூறு மிகுந்ததாய்-பூமிக்கு வடக்கில் ஆதிக்கம் கொண்டு வாழுகின்றது. வண்ணத்து மாகதப் பச்சையாய்-மிகவும் வசீகரங்கொண்டு இராஜோ குண விருத்திகளுடன் புத்தி பாக தீக்ஷண்யங்களில் ஒலி-ஒளி விளக்கங்களுக்கு ஒரு அரணாய் இலங்கும். இவ்வகையில், சுபவாக்கு-வித்யா வளம்-பாண்டித்யம்-ஆராய்ச்சி-இவற்றைத் தன் இயலாகக் கொண்டது. அரசாங்க நுண்ணுணர்வு-மதன கலை-கணிதம்-சிற்பம்-தர்க்க சாமர்த்தியம்-வர்த்தக நேர்மை ஆகியவற்றில் புலமை நலம் உடையது. பொருள் எல்லையில் உற்பத்தியிற் பிற்பட்டது. அபிவிருத்தி இதன் மூலதனம். வருங்கால ஆக்கங்களுக்கு அடிகோலுவது இதன் ஜீவநாடி. தனக்கென்று இல்லாத பிறர்க்கென உழைப்புக் கொள்வது இதன் முக்கிய இயல். கணிதம்-சிற்பம்-நாடு-பிரதிநிதித்துவம்-பொது ஸேவை-பிரசாரக தர்மம்—சட்ட ஞானம் ஆகிய துறைகள் புதன் என்னும் இந்த கிரகத்திற்கு உரியன.



# திரிந்த தமிழ்

(ஆ. ஜீவரத்தினம் அம்மாள்.)

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோ லினிதாவ தெங்குங் காணோம்" என்றருளினார் கவியுலகிற்குப் புத்துயிரளித்த பாவாணர் பாரதியார். எம்மொழியினுஞ் சிறந்தது எந்தன் தமிழ் மொழியே. தமிழ்ச் சொற்களும், தமிழ்ப் பழமொழிகளும், தமிழ் நூல்களும் மிக்க பொருட் செறிவுடையன. ஆனால் தமிழ்ச் சொற்களுள்ளும், தமிழ்ப் பழமொழிகளுள்ளும் சில பேச்சு வழக்கில் விபரீதமாகத் திரிந்தும் பொருள் வேறுபட்டும் நிற்கின்றன. அவற்றுட் சிலவற்றை ஈண்டுக் குறிப்பாம்.

"கலியாண சந்தடியில் தாலி கட்ட மறந்தான்" என்பது ஒரு பழமொழி. ஒரு கலியாணத்தில் முக்கிய அம்சம் தாலி கட்டல் இவ் வேலையைக் கலியாண வீட்டார் மறந்தனர் என்பது பொருந்துமா? இப்படியும் நம் முன்னோர்கள் ஒரு பழமொழி கூறியிருப்பார்களா? சாதாரணமாகக் கலியாண காலத்தில் தாலி கட்டுமுன் புரோகிதர் தாலியை ஒரு தேங்காயின்மீது வைத்து அதனைத் தொட்டு வாழ்த்தும்படி சபையிலுள்ளோர் ஒவ்வொருவருக்கும் காட்டுவது மரபு. கலியாண ஆர்வத்தினாலோ அல்லது மற்ற தொல்லைகளினாலோ புரோகிதர் சபைக்குத் தாலி காட்ட மறந்தார். இதனாலே "கலியாண சந்தடியில் தாலி காட்ட மறந்தான்" (புரோகிதன்) என்ற பழமொழி தோன்றிற்று. இது பொருத்தமானதே. இதில் தாலி காட்ட என்பது தாலி கட்ட என்று பின்னாளில் திரிந்து வழங்கலாயிற்று.

"தனக்குத் தனக்கென்றால்......? களைவெட்டும்" என்பது இன்னொரு பழமொழி. இது மற்றவர் காரியமெனின் கவனியாதவனும் தன் காரியமெனின் கண்ணுங் கருத்துமாகப் பார்ப்பவனுமான சுயநலன் ஒருவனைப் பற்றிப் பேசுங்கால் கூறப்படுவதாகும். பெரும்பாலும் வயலில் களையெடுக்கும் கூலியாள் பயிர்கட் கிடையே புல் பூண்டுகளிருந்தால் களைக்கொட்டைக் கீழே வைத்துவிட்டு அதே கையால்தான் புல் பிடுங்குவான். ஆனால் அவனே தன் சொந்த நிலத்தில் களையெடுப்பானானால் ஒரு கை களைவெட்ட மற்றொரு கையால் புல் பிடுங்குவான். இதனைப் பெரியோர்கள் சுயகாரியக் கருத்தாளர்கட்குப் பொருத்தி, "தனக்குத் தனக்கென்றால் பிடுங்கும் களை வெட்டும்" என உரைத்தனர். அஃதாவது ஒரு கை புல் பிடுங்கும் ஒரு கை களை வெட்டும் என்பதாம். இப் பழமொழியில் மேலே கேள்விக் குறி இட்டுள்ள விடத்திருந்த பிடுங்கும் என்ற சொல் பின்னாட்களில் திரிந்து மறக் குறைய அதேபோல் உச்சரிக்கும் ஒரு அனர்த்த வார்த்தையாகிவிட்டது.

இனி, எவரையாவது நாய் கடித்துவிட்டால் உடனே "செல்லாத காசை வைத்து செறுப்பாலடி" என்று வைத்தியம் சொல்லிவிடுகின்றனர். இஃதொரு திரிந்த வழக்குச் சொல். இதனை நம்பி நாய் கடித்த காயத்தில் செல்லாத காசு ஒன்று வைத்து ஒருவரைச் செறுப்பா லடித்ததையும் நான் நேரிற் கண்டிருக்கிறேன். என்னே விபரீதம்?—ஆறுகளில் செல்லாக்காசு என்ற ஒரு வகை நீர் வாழ்சிறு ஜந்து இருக்கிறது. அது இறந்த

# சுதந்திர வீரன்

"ரஷீத்."

சுமார் எழுபது வருடங்களுக்கு முன், இப்பொழுது இவ்வளவு பூச்சாண்டி காட்டும் இத்தாலிதேசம், அடிமை நாடாக இருந்தது என்று சொன்னால் வியப்படையக் காரணமிருக்கிறது. என்றாலும் அது ஆஸ்திரியாவின் சாம்ராஜ்யத்தின் கீழ் நசுக்கப்பட்டு அடிமைநாடாகப் பலமிழந்து கிடந்தது மாத்திரம் நிஜந்தான். இத்தாலி முழுவதும் சிறுசிறு ராஜ்யங்கள்; எல்லாம் ஆஸ்திரியாவிற்குப் பயந்து வாழ்ந்து வந்தவை.

இத்தாலியின் விடுதலைக்காக எவ்வளவோ வீரர்கள் உயிரையும் தியாகஞ் செய்து உழைத்தபோதிலும் நான்கு தலைவர்களின் பெயர் மாத்திரம் இத்தாலி தேசச் சரித்திரத்தில் பொன்னால் பொறிக்கப்பட வேண்டிய பெயர்கள்—கரிபால்டி, கவூர், மாஜினி, விக்டர் எம்மானுவல்.

விக்டர் எம்மானுவல் பிட்மாண்ட் என்ற சிறிய சமஸ்தானத்து மன்னன்; கவூர் அச் சமஸ்தானத்தின் பிரதம மந்திரி.

கவூரின் ஜீவிய சரித்திரம் தியாகம், உழைப்பு, முயற்சி, விடுதலை—இவைகளே நிரம்பியது. இத்தாலியின் ஒற்றுமை, இத்தாலியின் விடுதலை, இத்தாலியின் சாம்ராஜ்யம்—இவைகளே அவருடைய வீர இரத்தத்தில் ஊறிப்போன எண்ணங்கள்.

அடிமை தேசத்தின் விடுதலைக்காகப் பிரபுக்களின் கூட்டத்தில் பிறந்த தலைவன் கூட போராடியதுண்டு என்ற உண்மையை நிரூபித்தார் கவூர்.

காமில்லோ கவூர் பிரபுக் கூட்டத்தில் பிறந்தவர். பிட்மாண்ட் சமஸ்தானத்தில் அவர் தந்தைக்குப் பெரிய உத்தியோகம்.

கவூர் முதலில் ஒரு சிறிய பள்ளியில் வாசித்து வந்தார். அவருக்குக் கணிதத்தில் மிகவும் பிரேமை யானபடியால், அவர் தந்தை அவரை சேனையில் என்ஜினீர் பதவியைப் பெற, பயிற்சி அடையும்படி அனுப்பி வைத்தார். கவூர் மிகவும் மனக் கசப்போடு தன் படிப்பைப் படித்து முடித்து, ராணுவ சம்பந்தமாக கோட்டைகள் பழுது பார்க்கும் வேலையில் போய்ச் சேர்ந்தார்.

---

தாயின் காய்ந்த ஆற்று மணலில் கிடக்கும். அதனை எடுத்து வந்து நாய்க் கடியில் வைத்து சிறு பாலை என்னும் கொடியின் பால் அடித்தால் அப் பால் செல்லாக்காசு என்பதனோடு சேர்ந்தவுடன் கொதிக்க ஆரம்பிக்கிறது. அதனால் கடியுண்ட விடத்தில் சதை வெந்து காயமாகி நாய்க்கடியின் விஷம் சிறிது சிறிதாக வடிந்து விடுகிறது. வைத்திய முறை யறிந்த நம் முன்னோர் அதனை வழக்குச் சொல்லாக்கி "செல்லாக்காசு வைத்துச் சிறு பாலை யடி" என்று கூறினர். இதில் சிறுபாலை என்பது செருப்பால் எனத் திரிந்து விபரீதமாயிற்று.

ருசியற்ற வேலையில் அவர் அதிக காலம் தங்கவில்லை. இரண்டொரு வருடங்களில் தன் வேலையை ராஜிநாமா செய்துவிட்டார்.

பிறகு தந்தை ஒரு சிறிய எஸ்டேட்டை வாங்கிக் கொடுத்து அதை நிர்வாகம் செய்யம்படி கவூரை அனுப்பினார். இதுவும் அவருக்குப் பிடிக்கவில்லை. என்றாலும் பெற்றோரின் சொல்லைத் தட்ட முடியாமல் எஸ்டேட்டை நிர்வாகம் செய்யச் சென்றார்.

சில வருடங்களில் எஸ்டேட்டை எவ்வளவோ முன்னுக்குக் கொண்டு வந்த போதிலும், அரசியலிலும், தேசிய விடுதலையிலுந்தான் அவர் லட்சியங்கள் பொதிந்து கிடந்தன. இதற்காக அவர் பிரான்ஸ், இங்கிலாந்து, ஸ்விட்ஸர்லாண்ட் முதலிய அந்நியநாடுகளுக்கும் சென்று தம் அறிவையும், அனுபவத்தையும் விசாலப் படுத்திக்கொண்டார்.

சீக்கிரத்தில் இவருக்கு பிட்மாண்ட் சமஸ்தானத்தின் பார்லிமென்ட் சபையில் ஒரு இடம் கிடைத்தது. சிறுகச் சிறுக அவருக்கு ஒரு கூட்டத்தாரால் பார்லிமென்ட் சபையில் ஒரு தலைமைப் பதவியும் கொடுக்கப்பட்டது.

சிறிதுகாலம் சென்றபின் கவூர் பிட்மாண்ட் சமஸ்தானத்தின் பிரதம மந்திரியானார். அவர் பிறகு தன்னுடைய பத்து வருட காலத்தில் செய்த உழைப்பையும், ராஜதந்திரத்தையும், தீர்காலோசனையைப் பற்றியும் எவ்வளவு வியந்து பேசினாலும் சரியாக வர்ணிக்க முடியாது.

சட்ட வரம்பிற் குட்பட்ட கிளர்ச்சிக்காரர், சீர்திருத்தக்காரர் என்று எல்லோரும் கவூரைக் கருதிய போதிலும், அவர் பெரிய புரட்சிக்காரர். பரம எதிரிகளான இங்கிலாந்தையும், பிரான்ஸையும் இத்தாலியின் விடுதலை லட்சியத்தில் உழைக்கும்படிச் செய்த சாமர்த்தியம் கவூரைச் சார்ந்தது. இத்தாலியின் விடுதலைக்குக் குறுக்கே நின்ற ஆஸ்திரியாவிற்கு மற்ற நாடுகளின் அனுதாபம் ஏற்படாமல், அதைத் தனித் துண்டாக கவூர் நிறுத்திக் கொண்டார். நேசநாடுகளின் உதவியுடன் அந்தச் சிறிய சமஸ்தானம் பிட்மாண்ட் ஆஸ்திரியா சாம்ராஜ்யத்துடன் போர் புரியக்கூடிய நிலைமைக்கும் அவர் கொண்டுவந்தார். இத்தாலிய ஒற்றுமையை, எவ்வளவோ கஷ்டங்களைச் சமாளித்து, அவர் ஏற்படுத்தினார். அவருடைய இரத்தத்தில் இரத்தமாகக் கலந்திருந்த லட்சியங்களும் நிஜ ரூபத்தை அடைந்தன.

கவூரை எல்லோரும் இத்தாலி தேசத்துச் சுதந்திர வீரன் என்று புகழ்ந்துப் பாராட்டுவதில் ஒன்றும் வியப்பில்லை.

---

# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)



அறையினுள்ளே உடனே புக நினைத்த வீரமார்த்தாண்டன் ஒரு நிமிஷம் நிதானித்தான். அப்பொழுதும், அந்த அறையினுள், யாரோ மனிதன் நடமாடும் சப்தம் கேட்டது!

இதிலிருந்து வீத்மார்த்தாண்டன் ஒரு விஷயத்தைத் தெரிந்துகொண்டான். அதாவது உள்ளிருக்கும் மனிதன் அந்த அறையைச் சேர்ந்த அறையிலேயோ, அல்லது பக்கத்து அறையிலேயோ இருக்கவேண்டும்! ஏனெனில் வீரமார்த்தாண்டன் கண்கள் அவ்வறையைச் சுற்றிலும் பார்த்த போதிலும், ஒரு மனிதனையும் காணவில்லை. ஆனால்! அந்த அறையை அடுத்து, ஒரு சிறிய வழி, பக்கத்து அறைக்குச் செல்லுவதைக் கவனித்தன. அதன் வாயிற்புறத்தில் ஒரு கருப்புத் துணி தொங்கவிடப்பட்டு அந்த அறையை மறைத்துக் கொண்டிருந்தது.

அது சமைய லறையாகவோ, அல்லது படுக்கை யறையாகவோ, அல்லது ஏதாவது ஒரு அறையாகவோ இருக்கவேண்டும்!

வீரமார்த்தாண்டன் உடனே அறையினுள், (கால் பூட்ஸை நன்றாகச் சப்தம் செய்துகொண்டே) நுழைந்தான். அதன்மூலம் உள்ளிருக்கும், ஆளை வெளிப்படுத்தலாமென்று நினைத்தான். வீரமார்த்தாண்டன்; நினைத்தது வீண்போகவில்லை!

சடக்கென்று யாரோ ஒருவன் தன் மூச்சை அடக்கிக்கொண்டு நின்றது நன்றாகத் தெரிந்தது. அப்பொழுது, பக்கத்து அறையிலிருந்த கருப்புத் துணி மெதுவாக அசைந்தது தெரிந்தது!

இதிலிருந்து பக்கத்து அறையினுள் யாரோ மனிதன் இருக்கவேண்டுமென்றும், இச் சப்தத்தைக் கேட்டே, அத் துணியின் பக்கத்தில் நின்றுகொண்டு இங்கே கவனிக்கிறான் என்றும் வீரமார்த்தாண்டன் தெரிந்துகொண்டான். ஆனால்!

ஏன்! இந்த மனிதன் இன்னும் அங்கேயே இருக்கவேண்டும்! யார் வருகைக்காவது எதிர்பார்த்துக் கொண்டா? அல்லது அந்த வீட்டைப் பரிசோதிப்பதற்காகவா? ஒன்று அந்த மனிதன் முட்டாளாகவாவது இருக்கவேண்டும்;—இவ்வளவு விஷயங்கள் நடந்த பிறகுகூட அங்கு நிற்பதற்கு! அல்லது எதற்கும் துணிந்த முரட்டு மனிதனாகவாவது இருக்கவேண்டும்!

வீரமார்த்தாண்டனின் கண்கள் கீழே கிடந்த பெண்ணினருகில் சென்றன. அப்பொழுது அப் பெண்மணியின் வலது பக்கத்தில் ஒரு சிறிய வெள்ளைக் காகிதம் கிடந்தது தெரிந்தது.

உடனே வீரமார்த்தாண்டன் அப் பெண்ணின் பக்கத்தில் மண்டியிட்டு உட்கார்ந்த வண்ணம், அக் கடிதத்தை எடுத்தான்.

அப்பொழுது அவன் கண்கள், அப் பெண்மணியைப் பார்த்தன. தன்னை யறியாமல் வீரமார்த்தாண்டனின் கண்களிலிருந்து இரு சொட்டு நீர்த்துளிகள் விழுந்தன. அப்பொழுது அவன் மனம் இக் கொலைக்குப் பதில் கொலை வாங்குவதாகச் சபதம் செய்துகொண்டது. பிறகு கையி லெடுத்த கடிதத்தைப் பார்த்தான்; அதில்:—

புருஷோத்தமா !

உன் மனைவியையும், குழந்தையையும் உன் கடனுக்குப் பதில் எடுத்துக் கொண்டு வரும்படி ஆட்களை அனுப்பி யிருக்கிறேன். உன் பணம் வரும் வரையில்—அல்லது நீ தற்கொலை செய்துகொள்ளும் வரையில் அவர்கள் என்னிடம் அடமானமாக இருப்பார்கள் என்பது ஞாபக மிருக்கட்டும். தெரிகிறதா !

முகமூடி என்று எழுதி யிருந்தது.

'நீ தற்கொலை செய்துகொள்ளும் வரையில்' என்ற வரி (மிகவும் அழுத்தி) வரையப்பட் டிருந்ததிலிருந்து, வீரமார்த்தாண்டன், அதன் பொருளைத் தெரிந்து கொண்டான்.

அதாவது 'முகமூடி' என்னும், கொடிய கள்வன், புருஷோத்தமனைத் தற்கொலை செய்து கொள்ளும்படி, தூண்டி யிருக்கிறான் !

தவிர, முகமூடியின் கட்டளைப் பிரகாரம், புருஷோத்தமனின் மனை வியையும், குழந்தையையும் எடுத்துப் போகவந்த முரட்டு மனிதர்கள்—அதாவது 'முகமூடி'யின் ஆட்கள்—புருஷோத்தமனின் மனைவி, பலாத் காரம் செய்ததினால், (காரியம் மிஞ்சி விடுமென்றெண்ணி)—தற்காப்பிற் காக அவளைக் கொன்றுவிட்டார்கள்; குழந்தையையும் எடுத்துக்கொண்டு போய் விட்டார்கள் என்பதை வீரமார்த்தாண்டன் தெரிந்து கொண் டான் ! .

பின், ஏன் அங்கு ஒரு மனிதன் இன்னும் மறைந்து நின்று கொண் டிருக்கிறான் ! ஒருவேளை கீழே நடந்த விஷயங்கள் ஒன்றும் அவனுக்குத் தெரியாதோ ! [அதாவது அந்த ஆள், தன் தோழர்கள், ஒருவருக்கும் தெரி யாமல், அந்தக் குழந்தையை அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள்; ஆகையால் புருஷோத்தமன் வரும் வரையில் காத்திருந்து ஏதாவது விஷ யம் சொல்லிவிட்டுப் போகலாமென்று காத்திருக்கிறான் போயிருக்கிறது!] ............ஆனால் ! இக் கடிதத்திலிருந்து வீரமார்த்தாண்டன் ஒரு விஷ யம்—அதுவும், நிச்சயமாகத்—தெரிந்து கொண்டான். அதாவது, இது வரையில் நடந்த தற்கொலைகளுக்கெல்லாம் காரணம் 'முகமூடியே' என் பதைத் தெரிந்து கொண்டான். 'பேஷ் ! வெகு நன்றா யிருக்கிறது!' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான், வீரமார்த்தாண்டன்.

பிறகு அக் கடிதத்தைப் பத்திரமாக மடித்துத் தன் சட்டைப்பையி னுள் வைத்துக்கொண்டான் வீரமார்த்தாண்டன். ஏனெனில் பின்னால் ஒரு காரியத்திற்கு அது உபயோகப்படுமென்று தன் மனதினுள் நினைத்துக் கொண்டான்.........அப்பொழுது வீரமார்த்தாண்டன், திடீரென்று திடுக்

விட்டான்! அவனுடைய கண்கள் இந்த விடத்தில் இருந்தபோதிலும்; அவன் காதுகள் மிகவும் சுறுசுறுப்புடன் வேலை செய்தன. அவ்வறைக்குள் மெதுவாக யாரோ ஒருவன் நடந்து வந்த சப்தம் கேட்டது! அதுவும் பக்கத்தறையிலிருந்து!—ஆம்; ஒரு முரட்டுமனிதன் தன் கையிலிருந்த கத்தியை ஓங்கிக்கொண்டு மெதுவாக, வீரமார்த்தாண்டனை நோக்கி நடந்து வந்து கொண்டிருந்தான். என்! துப்பாக்கிக்காகப் பயந்தான் போலும்!

இதைக் கடைக்கண்ணால் கவனித்த வீரமார்த்தாண்டன் கவனியாதது போலவிருந்தான். ஆனால் எந்த நிமிஷத்திலும் அந்த அபாயத்தை எப்படியாவது தவிர்க்கத் தயாரா யிருந்தான்.

இதைக் கவனித்த முரட்டுமனிதன், தான் கவனிக்கப்படவேயில்லை என்ற தைரியத்துடன் மெதுவாக அடிமேலடி வைத்து, அருகே வந்ததும், கத்தியை ஓங்கிகொண்டு வீரமார்த்தாண்டன் பேரில் பாய்ந்தான்.

ஆனால், இதை எதிர்பார்த்துத் தயாரா யிருந்த வீரமார்த்தாண்டன், சடாலென்று எழுந்து மறுபுறமாக உருண்டு ஓடி, சற்றுதூரம் போனபிறகு எழுந்தான்.

அந்தச் செய்கை—அவ்வளவு வேகமாகச் செய்யப்பட்ட அச் செய்கை—வீரமார்த்தாண்டன் உயிரைக் காப்பாற்றியது.

இல்லாவிட்டால் அவனும் இத்தனை நேரம், முதலில் கத்தியால் குத்தப்பட்டு அந்தப் பெண்ணின் பக்கத்தில் இறந்து விழவேண்டி யிருக்கும்!

அம் முரட்டு மனிதன், என்ன நடந்தது என்று கவனிப்பதற்குள், அவன் கையிலிருந்த கத்தியை அவ்வறையின் மூலையை நோக்கிப் பறக்கும் படியாகச் செய்தது, வீரமார்த்தாண்டனின் துப்பாக்கியிலிருந்து வெளிப் பட்ட குண்டு.

அம் முரட்டுமனிதன் கையைப் பிடித்துக்கொண்டு 'அப்பா'வென்று கத்தினன். ஆனல் வீரமார்த்தாண்டன் அதை இலட்சியம் செய்யாமல் மறுபடியும் துப்பாக்கியின் குதிரையை அழுத்த, இம்முறை குண்டு முரட்டு மனிதனின் நடுநெற்றியில் பாய்ந்தது.

ஆம்! வீரமார்த்தாண்டன் எப்பொழுதும் திருடர்களைக் கொல்லும் பொழுது அவர்களின் நெற்றியின் நடு மையத்தில் குறிபார்த்துச் சுடுவது வழக்கம்.—அதுதான் அவன் அடையாளம்!—எங்கேயாவது யாராவது நடு நெற்றியில் குண்டு பட்டு இறந்து கிடந்தால்—அல்லது கொலை செய்யப் பட்டுக்கிடந்தால்—சந்தேகமில்லாமல் அது வீரமார்த்தாண்டன் வேலையே யாகும்!.........

நெற்றியில் குண்டால் தாக்கப்பட்ட முரட்டுமனிதன் சப்த மில்லாமல் கீழே விழுந்தான். வீரமார்த்தாண்டன் அவனைப் புரட்டிப் பார்த்தும், அவன் அசைவற்றுக் கிடந்தான்—அதாவது, இறந்து கிடந்தான்.

அப்பொழுது வீரமார்த்தாண்டன் மனதில் யாது தோன்றியதோ! என்னமோ! அச்சவத்தை உடனே குப்புறப் படுக்க வைத்து. அதன்

தோளின் கீழ் (அறையின் மூலையிலிருந்த கத்தியை எடுத்து) ஓங்கிக் குத்தினான்!

அதாவது இறந்து கிடந்த பெண்ணின் சவத்தின் கால்பக்கத்தில், இந்த முரட்டு மனிதனைப் புரட்டி, குப்புறப் படுக்கப்போட்டு அவன் தோளில் (இப் பெண்பேரில் சொருகப்பட்டிருந்ததுபோல) மற்றொரு கத்தியால் அழுத்திக் குத்தினான்.

அப்பொழுது அவன் மனதில், வெறி குடிகொண்டிருந்தது; அவன் கண்களில் சந்தோஷம் பொங்கிக் கொண்டிருந்தது.—அதாவது, தான் பழிக்குப் பழி வாங்கி விட்டோம் என்பதற்காக மட்டுமில்லை-தன் செய்கையின் மூலம் முகமூடியின் கர்வத்தையும், அகங்காரத்தையும் அடக்க நினைத்தான், வீரமார்த்தாண்டன்! அப்பொழுது கீழ்த்தளத்தில் சத்தம் உண்டாயிற்று. யாரோ பலர் மாடிக்கு கிடு கிடுவென்று ஏறிவந்த சந்தடி கேட்டது.

வீரமார்த்தாண்டன் விஷயத்தை அறிந்து கொண்டான். அதாவது, தான் சுட்டதினால் உண்டாகிய சப்தம் அக் கும்பலைச் சேர்த்திருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டான்.

ஆனால் வீரமார்த்தாண்டன் சற்றும் கவலையில்லாமல் சாவதானமாக எழுந்து தான் இருந்த அறையின் கதவை உட்தாழ்ப்பாள் போட்டு நன்றாக மூடிக்கொண்டான். அவன் தப்பும் வழியைப்பற்றிக் கவலைப்படவேயில்லை. தான் முதன்முதலில் அவ்வறைக்கு வந்தபொழுதே அவன் மனதில் அந்த எண்ணம் இருந்தது!

ஏனெனில், காரைத் தொடர்ந்து சென்ற போலீஸ்காரன் காரைப் பிடிக்க முடியாமல், எந்த நிமிஷத்திலும் இந்த வீட்டிற்குத் திரும்பி வருவான் என்று எதிர்பார்த்திருந்தான் வீரமார்த்தாண்டன். ஆகையால் அப்படி வந்தால் தப்பித்துக் கொள்வதற்கான வழியை ஏற்கனவே யோஜனை செய்து வைத்திருந்தான் வீரமார்த்தாண்டன்!

இல்லாவிட்டால் இவ்வளவு சாவதானமாகக் காரியம் செய்வதற்கு, வீரமார்த்தாண்டனுக்குப் பைத்தியமா, என்ன?

அதற்குள் தாழ்வாரத்தில் பலர் வந்த சப்தம் கேட்டது. அவர்களில் ஒருவன் தட தடவென்று சாத்தப் பெற்றிருந்த கதவைத் தட்டினான்; பிறகு 'யாரது, உள்ளே? மரியாதையாகத் திறக்கிறாயா? இல்லாவிட்டால் உடைத்துக்கொண்டு வருவோம்,' என்று கத்தினான்.

அப்படிக் கத்தியவன், தான் கீழே முதலில் கண்ட போலீஸ்காரனதான் என்பதைக் குரலிலிருந்து கண்டு கொண்டான் வீரமார்த்தாண்டன்.

ஆனால் வெளியே இருந்தவர்களுக்குக் கிடைத்த பதில் வீரமார்த்தாண்டனின் சிரிப்புத்தான்!—

ஆம்! வீரமார்த்தாண்டன், தான் எண்ணிய காரியம் முடிந்தால் அப்படித்தான் சிரிப்பது வழக்கம்!

அச்சிரிப்பு—அலட்சியமானதாகவும்—வெற்றியுடனும், வெறியுடனும் கூடியதாகவும் இருந்தது.

இப்பேர்ப்பட்ட சிரிப்பைக் கேட்டதும் திடுக்கிட்ட போலீஸ்காரன், கதவின் சாவித் துவாரத்தின் வழியாக உள்ளே நோக்கினன்.

உள்ளே இருவர் பிணமாகத் தரையில் விழுந்து கிடந்ததையும், பக்கத்தில் வீரமார்த்தாண்டன் கொடிய உருவம் கையில் துப்பாக்கியுடன் நின்று கொண்டிருந்ததையும் கவனித்த அவன், சற்றும் தாமதிக்காமல், கூட இருந்தவர்களைப் பார்த்து, "உடனே, கதவை உடையுங்கள்; உள்ளே வீரமார்த்தாண்டன் இருக்கிறான். அவனை நாம் பிடித்துக் கொள்ளலாம் ; உம் ! ஆகட்டும்" என்று கத்திய வண்ணம் கதவை தட தட வென்று தட்ட ஆரம்பித்தான்.

கதவின் நிலைமையிலிருந்து, அது இன்னும் 5 நிமிஷத்தில் உடைந்து விழுந்துவிடும் என்பதைத் தெரிந்து கொண்ட வீரமார்த்தாண்டன் உடனே துப்பாக்கியைச் சட்டைப் பையில் வைத்துக்கொண்டு, திடுதிடு வென்று அறையின் வலது மூலையிலிருந்த சாளரத்தை யடைந்து, அதன் வெளிப்புறத்திலிருந்த தண்ணீர்க் குழாயைப் பிடித்துக்கொண்டு, பக்கத்திலிருந்த சந்தில் இறங்கினன். அது மிகவும் சிறிய சந்தாகையால் அங்கு நல்ல காலமாக ஒருவருமே யில்லை !

கீழே இறங்கிய வுடனேயே முகமூடியையும், இருப்பு அங்கியையும், சட சடவென்று கழற்றி, முன்போல் சுருட்டித் தன் இடுப்பைச் சுற்றிலும் பெல்ட் போல் கட்டிக் கொண்டான் வீரமார்த்தாண்டன்.

இப்பொழுது அதே இடத்தில் நமது பழைய நண்பனாகிய கருணாகரன் நின்று கொண்டிருந்தான்.

கருணாகரன் ஒரு சிறிதும் தன் பொழுதை வீணாக்கவில்லை. அச்சந்தை விட்டு ராஜவீதியை நோக்கித் திரும்பினன்.

அவ்வீதியின் முதல் வீட்டில், அதாவது '170'ம் நெம்பர் வீட்டின் வாசற்படியில் ஒரே கும்பலாக விருந்தது.

ஒவ்வொருவரும் வீரமார்த்தாண்டனைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தனர். சிலர், "வீரமார்த்தாண்டன் மாடியில் அந்த அறையினுள் இருக்கிறான். அவன் கட்டாயம் போலீசார் கையில் அகப்பட்டுவிடுவான்" என்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது மாடியிலிருந்து ஒரு அதிசயமான குரல் வந்தது. "வீரமார்த்தாண்டன் தப்பித்துவிட்டான்; வீரமார்த்தாண்டன் தப்பித்தோடி விட்டான்; அறையை உடைத்துப் பார்த்தும் உள்ளே அவனைக் காணவில்லை," என்று யாரோ கத்தினர்கள்.

ஜனங்களின் ஆச்சரியம் அளவிட முடியவில்லை.........

அவர்கள் அங்கேயே நின்றுகொண்டு வீரமார்த்தாண்டனைப் பற்றி வம்பளக்க ஆரம்பித்துவிட்டார்கள்.

இதைப் பார்த்த கருணாகரன், தன்னை மீறிவந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு, கும்பலைவிட்டு ஓட்டலை நோக்கி நடக்க வாரம்பித்தான்.

அப்பொழுது அவன் மனம் பலவித எண்ணங்களை எண்ணிக்கொண் டிருந்தது. 'முகமூடியின் இருப்பிடம் அநேகமாய் மணிபுரத்திலேயே எங் காவது, ஒரு மூலையில் இருக்கவேண்டு மென்றும், புருஷோத்தமனின் ஆண் குழந்தை முகமூடியின் இருப்பிடத்தில்தான் இருக்கவேண்டுமென் றும் கருணாகரன் பலவாறாக எண்ணினான்.

'இப்பொழுது, முகமூடியின் இருப்பிடத்தை மட்டும் கண்டுபிடித்தால் ராமநாதனின் தற்கொலையின் காரணத்தைக் கூடத் தெரிந்துகொள்ளலாம்' என்றும் எண்ணினான் கருணாகரன்.

ஆம்! இப்பொழுது வீரமார்த்தாண்டனின் தலையில் பெரும் பொறுப்பு விழுந்திருக்கிறது! அநேக காரியங்களை வீரமார்த்தாண்டன் சாதிக்க வேண்டி யிருக்கிறது!

தவிர வீரமார்த்தாண்டன் இன்னொரு விஷயத்தையும் தெரிந்து கொண்டான்.

170-ம் நம்பர் வீட்டில் கொலை செய்யப்பட்டிருந்த பெண்ணின் பக் கத்திலிருந்து கண்டெடுத்த கடிதத்தின் மூலம், புருஷோத்தமனுக்கும், முகமூடிக்கும், ஏதோ நெருங்கிய சம்பந்தம் இருக்க வேண்டுமென்றும், புருஷோத்தமனைக் கண்டு பேசினால் அச் சம்பந்தத்தைத் தெரிந்து கொள் ளுவதுடன், ராமநாதன் தற்கொலை செய்துகொள்வதற்கு முன்னால் அவனு டன் என்ன பேசினான் என்பதையும், தெரிந்துகொள்ளலாமென்றும், கருணா கரன் எண்ணினான்.

'ஆனால்! புருஷோத்தமன் யார் என்பதே இன்னும் தெரியவில்லையே? சற்றுமுன் நடந்த விஷயங்களிலிருந்து புருஷோத்தமன் வீட்டிலில்லை யென்றும் எங்கேயோ வெளியில் போயிருக்கிறானென்றும் தெரிகிறது. 'இருக்கட்டும்! கூடிய சீக்கிரம் புருஷோத்தமனைச் சந்திப்பேன்,' என்று தன் மனதிற்குள் நினைத்துக்கொண்டான், கருணாகரன்.

அதற்குள் அவன் பாஸ்கர விலாசை அடைய, உடனே உள்ளே சென்று தன் அறைக்குச் சென்று, நிம்மதியாகத் தூங்க வாரம்பித்தான், கருணாகரன்.

(தொடரும்)

# ஞானசிந்தாமணி

(காசி - ஸ்ரீ. நீலகண்ட சுவாமிகள்.)



"ஓம். ஆபோவாயிதகும் ஸர்வம். விச்வாபூதாந்யாப:, ப்ராணாவா ஆப:, பசவ ஆபோ, அன்னமாப:, ஸம்ராடாபோ, விராடாப:, ஸ்வராடாப: ச்சந்தாகும்ஷியாப:, ஜ்யோதிக்ஷ்யாப:, யஜுஷ்யாப:, ஸத்யமாப: ஸர்வா தேவதா ஆப:, பூர்புவஸ்ஸுவராப: ஓம்," என்று மந்திராபிமந்திரிதமான உதகத்தினால் காசாணமுக பிரக்ஷாளனஞ் செய்து பின் ஸர்வஞ்ஞாய நம: என்று மந்திர முச்சரித்துப், பூஜாக் கிரகம் புகுந்து, ஓம் ஹ்ராம்பி. குதவியாதமனே நம: நிவிர்த்தி கலாயை நம: என்று மந்திரத்தினால் ஸ்தான சுத்தியை ஆசரித்துத் திரியம்பகமென்னும் மந்திரோச்சாரணத்தினால் பூர்வோத்திர முகனாகிச் சுகாசநத்திருந்து ஓம் ஹ்ரோம், ஈசாநாய நம: என்னு மந்திரத்தால் தக்ஷணகர மத்தியாநாமிகாங்குஷ்டங்களால் ஸ்ரீமத் விபூதியை ஆதாரத் திருந்தெடுத்துக் கொண்டு, வாமகர அங்குஷ்டாதி அங்குலிகளில் யகாராதி நகாராந்தமான பஞ்சாக்ஷரங்களை யுச்சரித்து விபூதியை விட்டுப் பின் "புநாத்யஜஜகத் ஸர்வம், த்ரிபுண்ட்ராத்ம ஸதா சிவ:, ஐசுவரிய ப்ராப்தி பீஜாயதஸ்மை ஸ்ரீபஸ்மனே நம:, என்று மந்திரத்தினால் பஜிதத்துக்கு நமஸ்கரித்துத், தக்ஷணகரத்தால் மூடி வலது தொடையின் மேலிட்டு ஓம் நமசிவாய என்னும் மூல மந்திரத்தால் பதினொரு தரம் அபிமந்திரித்து, அன்றி அக்னிரிதி பஸ்ம—வாயுரிதி பஸ்ம—ஜலமிதி பஸ்ம—ஸ்தலமிதி பஸம—வ்யோமேதி பஸ்ம—ஸர்வம் ஹம்வா இதம் பஸ்ம, மநயதா நிசக்ஷூகும்ஷி பஸ்மாநி. என்னும் மந்திரத்தினாலாவது மந்திரித்து, மாநஸ்தொகெத நயெமாந-ஆயுஷி-மானோகோஷு-மானோ அசுவேஷு ரீரிஷ:—வீராந்மனோருத்ரபாமிதொவதீ — ஹவிஷ்மம் தொமநஸாவிதே மதே." என்னும் மந்திரத்தின லெடுத்து, ஓம் ஹ்ரோம், யம் ஈசாநாயநம: என்று சிரசிலும், ஓம் ஹ்ரேம், வாம் தற்புருஷாய நம: என்று முகத்திலும், ஓம் ஹ்ராம், ஸீம் அகோராயநம: என்று இருதயத்திலும், ஓம் ஹ்ரீம், மம் வாமதேவாயநம: என்று குய்யத்திலும், ஓம் ஹ்ராம் நம் சத்தியோ ஜாதாயநம: என்று பாதத்திலும், சர்வாங்கத்திலும் சம்புரோக்ஷித்துப் பின் ஆசமனஞ் செய்து, பின்னும் விபூதியை எடுத்து மூல மந்திரத்தால் பதினொரு தரம் மந்திரித்து, அந்தப் பஸ்மத்தினால் ஓம் ஹ்ரோம் ஈசாநாய நம: என்று சிரசில் [ரு] தரம் தொட்டு, ஓம ஹ்ரேம்: தற்புருஷாயநம: என்று [சு] தரம் முகத்தில் தொட்டு, ஓம் ஹ்ராம் அகோராயநம: என்று [அ] தரம் இருதயத்தைத் தொட்டு, ஓம் ஹ்ரீம் வாமதேவாய நம: என்று (கூ) தரம் குய்யத்தைத் தொட்டு, ஓம் ஹ்ராம் சத்தியோசாதாயநம: என்று (அ) தரம் பாதத்தில் தொட்டுச் சர்வாங்கமும் உத்தூளனஞ் செய்து,

பின்னும் பஜிதத்தை எடுத்து ஜலமிசிரஞ் செய்து பூர்வோக்தமாக, மூர்த்தி லலாடாதி ஸ்தானங்களில், "த்ரியாயுஷம ஜமதக்நே: கஸ்யபஸ்ய த்ரியாயுஷம்: அகஸ்த்யஸ்ய த்ரியாயுஷம். யதைவாநாம்: திரியாயுஷம். தந்மெ அஸ்து திரியாயுஷம்," என்னும் திரியாயுஷ மந்திரங்களையும், "திரியம்பகம் யஜாமஹே, ஸுகந்திம் புஷ்டி வர்த்தனம்; உர்வாருகமிவபந்த

நாங் மிருத்யோர் மிருக்ஷிய்யமா மிருதாத் என்னும் திரியம்பக மந்திரத்தைச் செபித்துத் திரிபுண்டர தாரணஞ் செய்து, பின் ஓம் ஈசாந: ஸர்வ வித்யாநாம், சசிர்யேநம:, மூர்த்தினீ, ஓம். ஈசுவரஸ்ஸர்வ பூதாநாம் அங்கதாயைநம: பூர்வமூர்த்தினீ ஓம். பிரம்மாதிபதி பிரம்மணோதிபதி பிரம்மே ஷாயநம: தக்ஷிணமூர்த்தினீ. ஓம் சிவோநம அஸ்துமரீசயேநம:

வாமமூர்த்தினீ ஓம் ஸதாசிவோம் சூலிநேநம:- பச்சிமமூர்த்தினீ. ஓம். தத்புருஷாயவித்மஹே சாந்தயேநம:- பூர்வவத்திரே. ஓம். மஹாதேவாயதீமஹி வித்யாய நம:- தக்ஷிணவத்திரே. ஓம் தந்நோருத்ர பிரதிஷ்டாய நம:- வாமவத்திரே ஓம் ப்ரசோதயாத். நிவர்த்தியைநம:- பச்சிமவத்திரே ஓம் ஈசாநாய வக்த்ராயநம:- ஊர்த்துவவத்திரே ஓம் அகோரேப்யோதமனே நம:- இருதயம். ஓம் தத்ததோரேப்ய:- மோஹாயநம:- கண்டே ஓம் கோர அக்ஷயாயநம:- தக்ஷிணம்ஸே ஓம் கோரதரேப்ய: சக்திஷ்டாயநம:- வாமாம்ஸே ஓம் ஸர்வத: ஸர்வம்ருத்யவே நம:- நாபௌ ஓம் ஸர்வேப்யோ மாயாய நம:- ஜடரே. ஓம் நமஸ்தே அஸ்து ருத்ர:- அபயாஜயைநம: புருஷ்டே. ஓம் ரூபோப்யோசிவெப்ய ஜ்வராய நம:- வக்ஷஸே ஓம் வாமதேவாயநமோ ரக்ஷாயநம: குஹ்யே. ஓம் ஜ்யேஷ்டாயநமோ ரக்ஷாயநம: லிங்கே. ஓம் ருத்ராயநமோ ரத்யாயநம: தக்ஷிணோரௌ ஓம் காலாயநம: பலாயநம: வாமோரௌ ஓம் கல: காலநயநம: தக்ஷிணஜாநுநீ ஓம் விகரணாயநம: ஸம்பமிர்யேநம: வாமஜாநுநீ ஓம் பலத்ரியாயநம: தக்ஷிணஜங்காயாம். ஓம் விகரணாயநமோ புத்யைநம: வாமஜங்காயாம். பலகார்யாயநம:- தக்ஷிணஸ்பசி.

ஓம் ப்ரம்மதநாயநம: தாத்ரேநம: வாமஸ்பசி ஓம் ஸர்வபூதாத்மனே நமோக்ராமிண்யே நம: கட்யாம். ஓம் மோஹின்யேநம: தக்ஷிணபார்சே, ஓம் உன்மநாயநம: தமோமோகாய நம:- வாமபார்சே, ஓம் ஸத்யோஜாதம் பிரபத்யாமி ஸித்தியைநம:- தக்ஷிணபாதே ஓம் ஸத்யோஜாதாயவை நம:- ருத்யைநம:- வாமபாதே. ஓம் பவேபீதியைநம:- தக்ஷிணகரே. ஓம் அபவர்க்கதாய நம:- அஸ்து நம:- வாமகரே. ஜர்யத ஸர்வக்ராணே, ஓம் பஜன் வமாம்காந்த்யாய நம:- சிரசு. ஓம் பவஸ்வதாயநம:- தக்ஷிணவாகு ஓம் உர்தபவாயநம:- தவத்யை நம:- வாமவாகு இப்படிக் கலாநியாசம் விஸ்தரித்து,

பின், ஓம் ஹ்ராம் ஸர்வக்ஞ சத்திதாமனே ஹ்ருதயாய நம:- ஓம் ஹ்ரீம் த்ரி ஸப்த சத்திதாமனே சிரஸேஸ்வாஹா:- ஓம் ஹ்ரூம் அநாதிபோத சத்திதாமனே சிகாயைவஷட் ஓம் ஹ்ரைம் ஸ்வதந்திர சத்திதாமனே கவசாயஹூம், ஓம் ஹ்ரௌம் அலுப்த சத்திதாமனே நேத்ரத்ரயாய வௌஷட், ஓம் ஹ்ரம் அநந்த சத்திதாமனே அஸ்த்ராயபட், என்று ஷடங்கநியாசஞ் செய்து.

ஓம் ஹ்ரோம் ஈசாயநம: என்று சிரசிலும், ஓம் ஹ்ரேம் தத்புருஷாய நம: என்று முகத்திலும், ஓம் ஹ்ரும் அகோராயநம: என்று இதயத்திலும், ஓம் ஹ்ரிம் வாமதேவாயநம; என்று குய்யத்திலும்,

ஓம் ஹ்ரம் சத்தியோஜாதாய நம: என்று பாதத்திலும், பஞ்சப்ரம்ம நியாசஞ் செய்து, பின் மூர்த்தினீ லலாடம், கண்டம், இதயம் நாபி, கனிஷ்ட்டக்ரமமாக யகாராதி நகாராந்தமான பஞ்சாக்ஷர நியாசஞ் செய்து.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

விஷு ௵ தை ௴—கலியுகாதி 5043, சாலிவாகனம் 1864
பசலி 1351, கொல்லமாண்டு 1117, ஹிஜரா 13606,
இங்கிலீஷ் 1942௵ ஜனவரி ௴—1942௵ பிப்ரவரி ௴

| தை ௴ | ஜனவரி ௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | புத | து14-33 | கே36-20 | சி36-20ம | போங்கல் பண்டிகை, சங்கராந்தி பண்டிகை |
| 2 | 15 | வியா | திர6-23 சது58-28 | மூல30-8 | சித்60 | மாட்டுப் பொங்கல், மாசசிவராத்திரி, கரிநாள் |
| 3 | 16 | வெ | ●51-8 | பூரா24-13 | பி24-13சி | சர்வத்தீர அமாவாசை |
| 4 | 17 | சனி | பிர44-28 | உத்18-58 | சித்60 | மாகசுத்தம் |
| 5 | 18 | ஞா | துதி39-38 | திரு14-45 | அ14-45ம | சந்திரதரிசனம், கதிரறுக்க |
| 6 | 19 | திங் | திரி36-8 | அவி12-35 | சித்60 | சுப முகூர்த்தம் செய்ய |
| 7 | 20 | செவ் | சது34-23 | சத11-30 | மர60 | மாதசதுர்த்தி விரதம், திலசதுர்த்தி, கந்த சதுர்த்தி |
| 8 | 21 | புத | பஞ்34-40 | பூர12-23 | அ12-23சி | மதனபஞ்சமி, வசந்த பஞ்சமி |
| 9 | 22 | வியா | சஷ்36-15 | உத்15-40 | சித்60 | சுப முகூர்த்தம் |
| 10 | 23 | வெள் | சப்41-15 | ரே20-25 | அமி60 | ரதசப்தமி, மஹாசப்தமி |
| 11 | 24 | சனி | அஷ்46-40 | அசு26-45 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 12 | 25 | ஞா | நவ53-0 | பர33-53 | சித்60 | மூலிகை உபயோகிக்க |
| 13 | 26 | திங் | தச59-23 | ※க41-18 | ம41-18அ | தை கிருத்திகை |
| 14 | 27 | செவ் | ஏகா60 | ரோ48-35 | அ48-35சி | திருதினஸ்பிருக் |
| 15 | 28 | புத | ஏகா5-20 | மிரு55-15 | சித்60 | ஸ்மார்த்த ஏகாதசி, பீஷ்ம துவாதசி |
| 16 | 29 | வியா | துவ10-45 | திரு60 | மர60 | வைஷ்ணவ ஏகாதசி |
| 17 | 30 | வெள் | திர15-0 | திரு1-0 | சித்60 | விவாகம் சர்வமுகூர்த்தம் |
| 18 | 31 | சனி | ச○18-3 | புன5-30 | சித்60 | தைப்பூசம், பௌர்ணமி |
| 19 | 1942௵ பிப்ரவரி ௴ 1 | ஞா | ப○19-58 | பூச9-3 | சித்60 | மருந்துண்ண வாகனமேற |
| 20 | 2 | திங் | பிர20-55 | ஆய11-35 | சி11-35ம | |
| 21 | 3 | செவ் | துதி20-48 | மக13-3 | சித்60 | |
| 22 | 4 | புத | திரி19-38 | பூர13-30 | அமி60 | |
| 23 | 5 | வியா | சது17-43 | உத்13-13 | ம13-13சி | |
| 24 | 6 | வெள் | பஞ்14-53 | அஸ்12-3 | ம12-3சி | |
| 25 | 7 | சனி | சஷ்11-15 | சித்10-8 | ம10-8அ | |
| 26 | 8 | ஞா | சப்7-1 | சுவா7-36 | சி7-36ம | |
| 27 | 9 | திங் | அ1-57 நவ56-23 | விசா4-50 | ம4-50சித் | |
| 28 | 10 | செவ் | தச50-23 | அனு0-20 கேட்56-5 | சி0-20ம | |
| 29 | 11 | புத | ஏகா44-5 | மூல51-4 | ம51-40அ | சர்வ, மத்வ ஏகாதசி |

| | | | |
|---|---|---|---|
| | செ சனி | குரு | |
| கே | 11-கும்ப-புத 55-மகர-வ-பு | | |
| சூரி பு-சு | | | ராகு |
| | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.